டி. உசேந்தி

கி.பி. 11 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து
14 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி வரை,
சோழப் பேரரசின் படைத்தலைவர்களாக —
அவர்களது மேலாட்சியை ஏற்று ஆட்சித் தலை
வர்களாக - வரலாற்றில் இடம் பெற்றவர்
களும் - பின்னர் பாண்டியப் பேரரசின்
ஆட்சித்தலைவர்களாகவும், பின்னர்
தனியாட்சி பெற்ற தலைவர்களாகவும் விளங்கி
புகழ் பெற்றவர்களுமான சம்புவரையர்
என்போர் வீரர் குலத் திலகர்களாவார்கள்.
இத்தகு சம்புவரையர் பெருமை விளங்கிடு
தமிழக அரசு திருவண்ணாமலைத் தலைநக
ராகக் கொண்டு சம்புவரையர் மாவட்டம்
அமைத்திடும் வேளையில் நமது புலவர்
சே.விரதர் அவர்களின் செல்வன்

# முன்னுரை

வரலாற்றுச் சிறப்புமிக்க வட ஆற்காடு மாவட்டம், நிர்வாகச்சீரமைப்பிற்கென இரண்டாகப்பிரிக்கப்படும் என்றும் மாவட்டத்தின் தென்பகுதிக்குத், திருவண்ணாமலை நகரைத் தலைமையிடமாகக் கொண்ட 'சம்புவரையர் மாவட்டம்' எனப்பெயர் சூட்டப்படும் என்றும், தமிழக அரசின் சார்பில் செய்தி வெளியான போது தமிழக மக்கள் சற்று வியப்படைந்தனர்.

தமிழகத்தின் மாவட்டங்களெல்லாம் இதுவரை தலைவர்களின் பெயர்கள், அல்லது ஊர்களின் பெயர்கள் தான் பெற்றிருந்தனவே தவிர, ஒரு மரபு அல்லது குடியின் பெயரைப் பெற்றிருந்ததில்லை. முதன்முறையாக சம்புவரையர் என்ற ஒரு மரபின் பெயர் ஒரு மாவட்டத்திற்குச் சூட்டப்பெறுவது அவர்களது வியப்பிற்குக் காரணமாக அமைந்தது. அதையொட்டி சம்புவரையர் யாவர் என்று அறிந்து கொள்ளும் ஆவலையும் உருவாக்கியது.

சம்புவரையர் என்ற பெயரைத் தமிழ்ப்பெருமக்களுக்கு அறிமுகப்படுத்தியவர்களுள் பேராசிரியர் கல்கி அவர்களும் ஒருவர் ஆவர். அவருடைய இறவாப் புகழ் பெற்ற பொன்னியின் செல்வன்' வரலாற்றுப் புதினத்தின் வழி அவர், கடம்பூர் சம்புவரையர்' மரபையும், அம்மரபின் தலைவராக, செங்கண்ணரையும் அவர் மகன் கந்தமாறனையும் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்தியுள்ளார். ஆனால் பொன்னியின் செல்வன் புதினத்தில் வரும் சம்புவரையர் பற்றிய செய்திகள், நிகழ்ச்சிகள், அந்த மரபுக்குப்பெருமை சேர்ப்பனவாக இல்லை என்பதை, அதைப் படித்தவர் உணர்வர். 'சோழப்பேரரசில் பிளவுகளுக்குத் துணை போனவர்கள் சம்புவரையர்கள்

அவர்களுடைய கடம்பூர் அரண்மனையில்தான் சோழப் பேரரசின் பட்டத்து இளவரசன் ஆதித்தகரிகாலன் கொலை யுண்டான்...' என்ற போக்கில் கதை கொண்டு செல்லப்பட்டிருப்பதால், சம்வரையரைப் பற்றிய ஒரு தவறான எண்ணத்தை அது உருவாக்கியிருந்ததால், அப்படிப்பட்ட சம்புவரையர் பெயர் ஒரு மாவட்டத்திற்கு சூட்டப்படுகிறதே என்ற வியப்பும் மக்களிடையே ஏற்பட்டது. உண்மை வரலாற்றுக்கும், வரலாற்றுப் பின்னணியில் புனையப்படும் புதினங்களுக்கும் இடையே உள்ள நுண்மையான வேறுபாட்டைப் புரிந்து கொள்ளாத நிலையில் ஏற்படும் தடுமாற்றத்தின் விளைவு இது.

சம்புவரையர் யார் என்பதை அறிந்துகொள்ளும் ஆவலோடு அவர் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளைச் சில ஆண்டுகளாக தொகுத்து வைத்திருந்தேன். வரலாற்று ஆராய்ச்சியாளர் திரு. வை. சதாசிவப்பண்டாரத்தார் அவர்களின் 'பிற்காலச் சோழர் வரலாறு', 'பாண்டியர் வரலாறு', திரு கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியவர்களின் 'The cholas' 'The Pandyan Kingdom', டாக்டர். S கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்களின் 'The South India and her Muhammadan invaders', திரு. வெங்கடரமணய்யா அவர்களின் Early Muslim Expansion in South India, 'The Ma'bar, திரு. S. திருவேங்கடாச்சாரியார் அவர்களின் ஆங்கிலப்பதிப்பான கங்காதேவியின் மதுராவிஜயம், இரட்டைப்புலவர்களின் ஏகாம்பரநாதர் உலா, திரு ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களின் "கள்ளர் சரித்திரம்" ஆகிய நூல்களில் சம்புவரையர் பற்றிய பல வரலாற்றுக் குறிப்புகள் இருப்பதைக் கண்டு அவைகளைத் தொகுத்து வைந்திருந்தேன் கல்வெட்டு ஆராய்ச்சி ஆண்டறிக்கைகள், தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுப்புகள், ஆகியவற்றில் உள்ள சம்புவரையர் தொடர்புடைய கல்வெட்டுக்களையும் குறித்து வைத்திருந்தேன்.

அண்மையில் 'சம்புவரையர் வரலாறு' குறித்த நூல்களைப் பெற்றுத் தருமாறு என் தந்தை புலவர் கா. கோவிந்தன் அவர்களை கேட்டபோது, இதுவரை சம்புவரையர் பற்றிய முழு வரலாற்று நூல் எதுவும் எழுதப்படவில்லை என்பதைக் கண்டேன். ஏற்கனவே நான் தொகுத்து வைத்திருந்த குறிப்புகளை அவரிடம் கொடுத்தேன். அவைகளை முறைப்படுத்தி நூல் வடிவில் தொகுத்து எழுதுமாறு அவர் பணித்ததன் விளைவாக உருவாகியது தான் 'சம்புவரையர்' என்ற இந்தச் சிற்றேடு.

இடைக்காலத் தமிழக வரலாற்றின் பல்வேறு கட்டங்களிலும் தொடர்பு கொண்டு வாழ்ந்த சம்புவரையர் மரபின் முன்னூறு ஆண்டுகால நெடிய வரலாற்றை முறைமைப்படுத்தி முழுமையாக எடுத்துச் சொல்லும் வரலாற்று நூல் எதுவும் இன்று வரை எழுதப்படாது போனது பெருங்குறையே.

அவர்தம் வரலாற்றை முழுமையாக வரைந்திட வாய்ப்பும், நேரமும் இல்லாத நிலையில், அவ்வரலாற்றின் விளிம்புகளைத் தொட்டுக்காட்டும் சிற்றேடாகத்தான் இந்நூல் அமைந்துள்ளது. கல்வெட்டுக்களும், இலக்கியச் சான்றுகளும் சுட்டிக்காட்டும் சம்புவரையர்களுடைய நிறைகளையும் குறைகளையும், நடுநிலை பிறழாத நிலையில் ஆராய்ந்து, வரலாற்றுக் கண்ணோட்டத்தோடு எழுதப்பட்ட இந்நூலில் குறைகள் இருக்கலாம். எந்த ஒரு வரலாற்று நூலும் முழுமை பெற்றதாக அமையவில்லை. அதுதான் வரலாற்றிற்கே உள்ள தனிச்சிறப்பு. வரலாற்று ஆராய்ச்சித் துறையில் கருத்து வேறுபாடுகள் ஏற்படுவது இயற்கை. புதியனவாகக் கிடைக்கும் ஆதாரங்களால் ஏற்கெனவே ஏற்கப்பட்டிருந்த செய்திகள், கருத்துக்கள், வரலாற்றுக்கோணங்கள், திருத்தமெய்தலும் இயல்பாகும். அவ்வகையில் இதனையொட்டி இன்னும் பல நூல்கள் சம்புவரையர்களுடைய முழுமையான

வரலாற்றைத் தரும் வகையில் எழுதப்பட இச்சிற்றேடும் ஒரு கருவியாக அமைய வேண்டும் என்பதே இந்நூல் எழுதப்பட்டதன் நோக்கமாகும்.

இந்நூல் முழுமை பெறுவதற்குத் தேவையான அரியபல குறிப்புகளை, என் அருமை நண்பரும், தலைசிறந்த கல்வெட் ஆராய்ச்சியாளருமான, பேராசிரியர் இல. தியாகராசன் அவர்களும், தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குனர், திரு நடன. காசிநாதன் அவர்களும் தந்துதவினார்கள். தமிழ்ப்பொழில் இதழில், திரு. தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் எழுதியுள்ள 'சம்புவராய மன்னர்' என்ற கட்டுரையையும், ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள் எழுதிய 'நந்தா விளக்கு' என்ற நூலையும், மறைமலையடிகள் நூலகத்தினர் தந்துதவினர் அவர்களுக்கெல்லாம் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் எழுதுவதற்குக் கருவிகளாக அமைந்த தமிழ், ஆங்கிலநூல்களையும், கல்வெட்டுத்தொகுப்புகளையும் எழுதிய வரலாற்று ஆசிரியர்களுக்கும், ஆராய்ச்சியாளர்களுக்கும் எனது நன்றியுரியதாகும்.

என்னையும் மதித்து என் கன்னி முயற்சியாம் இந்நூலுக்கு அணிந்துரை அளித்து என்னைப் பெருமைப்படுத்திய, தமிழக முதல்வர் டாக்டர். கலைஞர் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி. இந்நூலைக் குறுகிய காலத்தில் அழகுற அச்சிட்டு அளித்த, காஞ்சி துரை அச்சக உரிமையாளர் திரு வெ. சம்பந்தம் அவர்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள,

**கோ. திருமாவளவன்**

# 1. தோற்றுவாய்

"வடவேங்கடம் தென் குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்" என்று போற்றப்பட்ட தமிழகத்தின் வரலாற்றில் பொற்காலமெனப் புகழப் பெறுவது பிற்காலச் சோழப் பேரரசர் காலமாகும்.

சோழப் பேரரசர் தம் ஆற்றலால் 'அலைகடல் நடுவில் பலகலம் செலுத்தித் தென் கடற்பரப்பில் ஈழத்தையும், முந்நீர் பழந்தீவு பன்னீராயிரத்தையும், மேலைக் கடலிடை சாந்திமத் தீவையும், 'பல் பழந்தீவையும்', கீழைக் கடற் பரப்பில் 'கடுமுரண் கடாரத்தையும், 'தேனக்கவார் பொழில் 'மாநக்க வாரத்தையும்', சோழப் பேரரசின் விளிம்புகளாக மாற்றினர். குணகடல், "சோழ ஏரி" யானது குமரிமுனை தொட்டு வங்கம் வரையுள்ள கீழ்க்கடற்கரை "சோழ மண்டலக் கடற்கரை" எனப் பெயர் பெற்றது.

வடதிசைப் பரப்பில், 'வெறிபுனல் தீர்த்தத்து எறிபுனல் கங்கை, வரை' அவர்கள் வெற்றி உலாவந்தனர். 'வேங்கை நாடும், குடமலை நாடும், கொல்லமும், கலிங்கமும்' அவர்தம் பேரரசின் அங்கங்களாயின. துங்கபத்திரை ஆறு சோழப் பேரரசின் வடக்கெல்லையானது. 'முரண தொழில் சிங்களர் ஈழ மண்டலம்,' 'மும்முடிச் சோழ மண்டலமென' புதுப்பெயர் பெற்ற சோழப் பேரரசின் தெற்கெல்லை யானது.

'நாவலந்தீவு' என்றழைக்கப்பட்ட இந்திய துணைக் கண்டத்தின் வரலாற்றிலேயே, பிற்காலச் சோழப் பேரரசுககு இணையாக வைத்து எண்ணக்கூடிய பேரரசு, - மவுரிய, முகலாயப் பேரரசு உட்பட, எதுவும் இருந்ததில்லை என்பது வரலாற்று உண்மை.

கி. பி. 881-லிருந்து கி. பி. 1279 வரை, ஏறத்தாழ மூன்று நூற்றாண்டுகள், தமிழகத்திற்கு மட்டுமின்றி, தென்னகத்தின் பெரும் பகுதிக்கும் சீரிய ஆட்சியை, நிலையான ஆட்சியை, அமைதியான ஆட்சியை அளித்த பெருமை சோழப் பெரும் பேரரசுக்கே உரியது.

இதற்குக் காரணமாக அமைந்தவை சோழப் பேரரசர்களின் ஆற்றலும், அவர்தம் படை வலிமையும், அவர்களுடைய ஆட்சி அமைப்பும், அரசியல் நெறியுமேயாகும்.

ஈழம் முதல் வேங்கி வரை பரந்து விளங்கிய சோழப் பேரரசு, ஆட்சி முறைக்கென பலமண்டலங்களாகப் பிரிக்கப் பட்டிருந்தது. மண்டலங்கள், கோட்டங்கள், கூற்றங்கள், வளநாடுகள், நாடுகள் ஊர்கள் என பிரிக்கப்பட்டு, அவை ஒவ்வொன்றும் பெருமளவு தன்னாட்சி அதிகாரங்கள் கொண்ட அமைப்புகளாக இயங்க அனுமதிக்கப்பட்டிருந்தன• அதிகாரம் ஒரே இடத்தில் குவித்து வைக்கப்படாமல் பரவலாக்கப்பட்டிருந்தது. மைய அரசின் நடு நாயகமாகப் பேரரசனும், அவன் சார்பில் மண்டலங்களையும் மற்றப் பிரிவுகளையும் ஆட்சி செய்கின்ற பொறுப்பில் படைத்தலைவர்கள் குறுநில மன்னர்கள், அதிகாரிகள், தேர்ந்தெடுக்கப்பட்ட ஊர் அவையினர் ஆகியோரும் இருந்து வந்தனர்.

அத்தகைய படைத்தலைவர், குறுநில மன்னர், நாடு காவல் அதிகாரிகள் போன்றோருக்குச் சோழப் பேரரசர்கள் பல பட்டங்களை வழங்கிச் சிறப்பித்துள்ளனர். பழு வேட்டரையர், வாணகோவரையர், பல்லவரையர், விழுப்பரையர், முனையதரையர், சம்புவரையர், சேதிராயர், காடவராயர், மழவராயர், பிரம்மமாராயர், அதிகமான், மலையமான், போன்ற பட்டங்கள் அவற்றுள் அடங்கும். இப் பட்டங்களைப்

பெரும்பாலும் தம் பெயர் அல்லது சிறப்புப் பெயர்களோடு இணைத்தே சோழப் பேரரசர்கள் அளித்து வந்தமை குறிப்பிடத்தக்க தொன்றாம்.

''சோழப் பேரரசில் யாண்டும் அமைதிநிலவியிருந்தமைக்குக் காரணம் இத்தகையோரின் போராற்றலும் பேருதவியுமே எனலாம். இப் பேரரசுக்குட்பட்டிருந்த குறுநில மன்னர்கள், தம் பேரரசன்பால் பேரன்புடையர்களாய், உற்றுழி உதவி வந்தமையும், அத்தகைய நிலைக்கு ஓர் ஏதுவாயிருந்தது என்பது உணரற்பாலது'' என தி. வை. சதாசிவப்பண்டாரத்தார் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.[1]

சோழப் பேரரசர் ஆட்சியில் குறுநில மன்னர்களாகவும், அரசியலில் பலதுறைகளிலும் அதிகாரிகளாகவும் இருந்து தம் அரசனது ஆணையின்படி யொழுகி நாட்டிற்குப் பல்லாற்றானும் தொண்டு புரிந்தோருள்பலர், கல்வெட்டுக்களிலும், செப்பேடுகளிலும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

பிற்காலச் சோழப் பேரரசில் தொண்டை மண்டலத்தின், ஒரு பகுதியின் நாடுகாவல் அதிகாரிகளாகவும், படைத்தலைவர்களாகவும் விளங்கிய ஒரு பிரிவினர் சம்புவரையர் என்ற பட்டம் பெற்றிருந்தனர். இம் மரபினர் சம்புவராயர், என்ற பெயர்களில் கல்வெட்டுக்களில் இடம் பெற்றுள்ளனர். இவர்கள் செங்கேணி குடியைச் சார்ந்தவர்கள் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

பல்லவப் பேரரசின் தலைமையிடமாக விளங்கிய தொண்டை மண்டலம், கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில், சோழ மன்னன் முதலாம் ஆதித்தனால் கைப்பற்றப்பட்டு சோழப் பேரரசுடன் இணைக்கப்பட்டது. அதுசயங்

கொண்ட சோழ மண்டலம் என்ற புதிய பெயரைப் பெற்றது. அச்சயங்கொண்ட சோழ மண்டலத்தின் ஒரு பிரிவான பல்குன்றக் கோட்டத்தின் ஆட்சித் தலைவராக நாடுகாவல் புரிந்தவர்கள் சம்புவரையர்கள் ஆவர்.

''பல்குன்றக் கோட்டம் பாலாற்றுக்கும் தென்பெண்ணை யாற்றுக்கும் இடையில் பவள மலையை மேல் எல்லையாகக் கொண்டிருந்தது. பவளமலை இப்போது சவ்வாது மலையென்ற பெயருடன் வடாற்காடு மாவட்டத்தில் உள்ளது. பல்குன்றக் கோட்டத்துச் சம்புவராயருக்குப் படைவீடு தலைநகராக விளங்கிற்று'' [2] என சித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

சோழப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின், தமிழகத்தில் பிற்காலப் பாண்டியப் பேரரசு ஏற்றம் பெற்றது. அப்பாண்டியப் பேரரசின் ஆளுகைக்கு உட்பட்டு தொண்டை மண்டலத்தின் ஆட்சியாளர்களாக சம்புவரையர் விளங்கினர்.

அதற்கடுத்து விசயநகரப் பேரரசின் ஆட்சியிலும் தொண்டை மண்டலத்தின் ஒரு பகுதியின் ஆட்சித் தலைவர்களாக சம்புவரையர் தொடர்ந்து நீடித்தனர். விசயநகரப் பேரரசன் முதலாம் புக்கனின் மகனான குமார கம்பணன் தமிழகத்தின்மீது படையெடுத்தபோது, சம்புவரையர் ஆட்சிக்குட்பட்ட பகுதி கைப்பற்றப்பட்டு விசயநகரப் பேரரசோடு இணைக்கப்பட்டுவிட்டது.

கி. பி. 12ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து கி. பி. 13ம் நூற்றாண்டின் இறுதிவரை சோழப் பேரரசின் படைத்தலைவர்களாகவும், அதையடுத்து பாண்டியப் பேரரசு, விசயநகரப் பேரரசு ஆட்சியில் தொடர்ந்து தொண்டை

மண்டலப் பகுதியின் ஆட்சித் தலைவர்களாகவும் விளங்கிய சம்புவரையர்கள் தம் மேலாண்மை அரசர் சார்பிலும், தம் சார்பிலும் வழங்கிய கல்வெட்டுக்கள், வடஆற்காடு, செங்கை அண்ணா மாவட்டங்களில் காணப்படுகின்றன.

---

1. பிற்காலச் சோழர் வரலாறு, 1975, பக் 189

2. "நந்தா விளக்கு", நந்தா விளக்கு 1956, பக் 84

# 2. சம்புவரையர் மரபு

சம்புவரையர் அல்லது சம்புவராயர் என்ற சொல், சம்பு + அரையர் என்ற வேர்ச்சொற்களினின்றும் உருவானது என்று கருதப்படுகிறது.

சம்பு என்ற சொல், சம்பு என்ற ஒரு குலத்தைக் குறிக்கும் சொல்லாகவும் இருக்கலாம். அதுவே சிவபெருமானைக் குறிக்கும் பெயராகவும் அமையக் கூடும்.

'அரையர்' என்ற சொல் தலைவர் என்ற பொருளைக தரும் ஒரு பட்டப் பெயராகும்.

மரபு வழிக் கதைகள் சம்புவரையர்களின் முன்னோர் நெருப்பிலிருந்து (அக்னி) தோன்றியவர்கள் என்றும், வேறு சிலர் அவர்கள் சம்பு (ஜம்பு) முனிவரின் வழித் தோன்றல்கள் என்றும் கூறுகின்றன.

அவர்கள் சம்பு குலத்தவர் என்று ஏகாம்பரநாதர் உலா என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.[1] கல்வெட்டுக்களிலும் குறிக்கப்பட்டுள்ளது.[2]

சம்பு வரையர்கள் பல்லவர்களின் வழித் தோன்றல்களாக இருக்கலாம், என தி. வை சதாசிவ பண்டாரத்தார் தம்முடைய 'சம்புவராய மன்னவர்' என்றக் கட்டுரையில் குறிப்பிடுகிறார்.[3] ஏகாம்பரநாதர் உலாவில் 'பல்லவன் சம்பு குலப்பெருமாள்' என்று குறிப்பிடப்பட்டிருப்பதும்,[4] கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ள சீயன், பல்லவாண்டான்,[5] போன்ற பட்டங்களும் அவர்கள் பல்லவர்மரபில் வந்தவர்களாக இருக்கலாம் என்ற கருத்துக்கு[6] ஆதாரங்களாத் உள்ளன.

சம்புவரையர்கள் கள்ளர் இனத்தின் ஒரு பிரிவினராக இருக்கக்கூடுமென ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் தம்முடைய கள்ளர் சரித்திரம் என்னும் நூலில் குறிப்பிடுகிறார் [7].

தமிழ் லெக்சிகன் தொகுப்பு நூலிலும் சம்புவரையர் என்ற பட்டப்பெயர் கள்ளர் மரபினரில் ஒரு பிரிவினருக்கு வழங்கப்பட்ட பெயர் என்று குறிப்பிடப்பட்டிருப்பதையும்[8] கருத்தில் கொள்ளவேண்டும்.

சம்புவரையர்கள் செங்கேணி என்னும் குடிப்பிறந்தவர்கள் என்பதற்கான ஆதாரங்கள் ஏராளமான கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன.[9]

## ஆட்சிப் பரப்பு :

செயங்கொண்ட சோழ மண்டலத்து, பல்குன்றக் கோட்டத்து ஆட்சித் தலைவர்களாக விளங்கிய சம்புவரையரின் ஆட்சிப்பரப்பின் எல்லை, கிழக்கே திருக்கழுக்குன்றத்தையும், தெற்கே திருவரசிலியையும் தன்னகத்தே கொண்டிருந்தது.

**தலைநகர் :** சம்புவரையர்களின் தலைநகராக முதலில் மரகத நகரம் என்று பெயர் பெற்ற விரிஞ்சிபுரமும், பின்னர் காஞ்சி மாநகரும் விளங்கின. அவர்களது கோட்டை நகராக விளங்கி வலிமை சேர்த்தது இன்று படவேடு என்றழைக்கப் படும் படைவீடு நகரமாகும்.

வடாற்காடு மாவட்டத்தில் போளூரிலிருந்து, வேலூர் செல்லும் வழியில் சந்தைவாசல் என்னும் ஊர் உள்ளது.

அதற்கு மேற்கில், மூன்று பக்கங்களிலும் மலைகளால் சூழப் பட்டுள்ள இடைநிலத்தில், ஆரணியாற்றின் கரையில் படைவீடு அமைந்துள்ளது[10].

சம்புவரையர்களின் மலைக்கோட்டை நகரான படைவீடு நகருக்கு, இராசகம்பீரம், இராசகம்பீரன்மலை என்றும் பெயர்கள் உள்ளன.

மூன்றாம் இராசராசசோழனின் இருபதாம் ஆண்டு கல்வெட்டொன்று வைகலூர்த் திருமலையிற் காணப்படுகிறது. அதில் 'சயங்கொண்ட சோழ மண்டலத்துத் தமனூர் நாட்டு விரன் பாக்கத்து இலாலப்பெருமாள் மகன் ஆண்டான்கள் பங்களராயர்க்குப் பல்குன்றக்கோட்டத்துப் பங்கள நாட்டு நடுவில்....க் குன்றத்தூரான ராசகம்பீர நல்லூர் இவர்க்குக் காணியாகக் கீழ் நோக்கின கிணறும் மேனோக்கின மரமும் நாற்பாலெல்லையும் விற்றொற்றிப்பரிக்கிரயத்துக்கு வித்தாவ தாகக் கொடுத்தோம். அத்தி மல்லன் சம்புகுலப்பெருமாளான ராச கம்பீரச் சம்புவராயனேன்''[11] என்று பொறிக்கப் பட்டுள்ளது இதை ஆராய்ந்த திரு. பண்டாரத்தார் அவர்கள், இந்த ராசகம்பீரச்சம்புவராயனே படைவீட்டில் மலைக்கோட்டை அமைத்தவன் எனவும், அவன் பெயரா லேயே அந்நகர் இராசகம்பீரபுரம் எனவும், இராச கம்பீரன் மலை எனவும், படைவீட்டு ராச்சியம், இராசகம்பீரவி ராச்சியம் எனவும் பெயர்பெற்றது என்று குறித்துள்ளார்.[12]

படைவீடு தொன்மையில் அப்பகுதியை ஆண்ட குறும்பர் இனத்து மன்னர்களின் தலைநகராக விளங்கியது. 16 கல் சுற்றளவு கொண்ட படைவீடு நகரில் கோயில்களும், மாளிகை களும் நிறைந்திருந்தன. இன்று அப்பகுதியில் உள்ள சந்தை வாசல் நகரும், அதற்கு நான்கு மைல் தொலைவில் உள்ள

புஷ்பகிரி என்ற கிராமமும் அன்று படைவீடு நகரின் பகுதி களாக விளங்கின. புகழ் பெற்ற அந்தப்படைவீடு நகர் இன்று சிறிய கிராமமாகத் தோற்றமளிக்கிறது. [13]

சம்புவராயர்கள் அமைத்த கோட்டையின் அடிப்பகுதி களும், கோட்டைச் சுவர்ப்பகுதிகளும் படைவீட்டின் மேற்குப் பகுதியில் 'கோட்டை மேடு' என்ற இடத்தில் காணப்படு கின்றன.

இக்கோட்டைமேடு 20 ஏக்கர் நிலப்பரப்பில் இடம் பெற்றுள்ளது. இக்கோட்டையின் சுவர்ப்பகுதி நன்குத் தெரிகிறது. இச்சுவர் செங்கற்கட்டிடத்தை உள்ளடக்கிக் கருங்கல்கொண்டு இருபக்கங்களிலும் பரவப்பெற்றதாகத் தெரிகிறது. கோட்டைமேட்டில் உள்ள பகுதிகளைச் சீர் செய்கின்றபோது பெருமளவில் செங்கற்கள் எடுக்கப்படு கின்றன உரல்கற்கள், சந்தனம் அரைக்கப் பயன்படும் கற்கள், போன்ற பல சின்னங்கள், நிலத்தைச் சீர் செய்கை யில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இக்கோட்டைக்கு இரண்டு கல் தொலைவில் மேற்கு திசையில் ஒரு மலை உள்ளது. இது இராச கம்பீரன்மலை என்று அழைக்கப்படுகிறது ''எனத் தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறையின் குறிப்பொன்று விளக்குகிறது. [14]

''தற்போது இக்கோட்டையின் மேட்டுப்பகுதி அனைத்தும் தனிப்பட்டோர்களால் வேளாண்மைப் பகுதியாக மாற்றப்பட்டு வேளாண்மை செய்யப்பட்டு வருகிறது. வேளாண்மை செய்வதற்காக இக்கோட்டையின் சுவரை அழித்து வருகின்றனர். நாளடைவில் இக்கோட்டை அடிச் சுவடு தெரியாமலேயே போகக்கூடுமெனத் தெரிகிறது'' என அக்குறிப்பு வேதனையுடன் எச்சரிக்கிறது.

சம்புவரையர் வாழ்ந்ததின் நினைவாக அவரால் எழுப்பப் பட்ட அம்மையப்பேச்சுரர் ஆலயம் படைவீடு பகுதியில் உள்ளது. இந்த ஆலயத்தை எடுப்பித்தவன் அத்திமல்லன் சம்புகுலப்பெருமாளான இராசகம்பீரச் சம்புவராயணனாக இருக்கக்கூடும் என்று பண்டாரத்தார் கருதுகிறார்.[15]

---

1. இரட்டைப் புலவர், ஏகாம்பர நாதர் உலா,
 கன்னி 61 – 'சமபு குலத்தொருவன்'
 கன்னி146 - 'சம்புபதி'
 கன்னி 151 – 'சம்புகுலப்பெருமாள்'
2. தென் இந்தியக் கல்வெட்டுக்கள், மடலம் 1 எண் 74- சம்புகுலப் பெருமாள்.
3. தமிழ்ப்பொழில், இரண்டாம் துணர், பக் 144
4. கன்னி 151
5. தெ. இ. க. மடலம் 3 எண் 456
6. கலைக்களஞ்சியம், சம்புவராயர், பக் 442, (1956)
7. கள்ளர் சரித்திரம், (1984), பக் 46.
8. Tamil Lexicon, Vol III 1928 - 29.
9. தெ. இ. க. மடலம் 7 எண் 67, மடலம் 3 எண் 60.
10. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை 'நந்தாவிளக்கு', நந்தாவிளக்கு, (1956) பக் 84
11. தெ. இ. க. மடலம். 1, எண் 74.
12. "சம்புவராய மன்னர்", தமிழ்ப்பொழிய், துணர் 2, பக் 148.
13. வடாற்காடு மாவட்ட வரலாறு – (Manual of the North Arcot district) Vol II, P 401.
14. நடன. காசிநாதன், இயக்குநர், தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை.
15. "சம்புவராய மன்னர்" தமிழ்ப்பொழில், துணர் 2, பக் 148.

# 3. சோழப் பேரரசின் படைத்தலைவர் சம்புவரையர்

சங்க காலத் தமிழகத்தில், தமிழ்நிலத்தின் வட பகுதியான தொண்டை நாட்டை ஆண்ட மன்னர்கள் தொண்டைமான்கள் என்றழைக்கப்பட்டனர். "சான்றோருடைத்து" எனும் சிறப்பைப் பெற்றத் தொண்டைநாடாண்ட முதல் மன்னனாக வைத்து எண்ணப்படுபவன் தொண்டைமான் இளந்திரையன் என்பவன் ஆவன். இவன் சோழர்மரபில் வந்தவன். கடியலூர் உருத்திரங்கண்ணனாரின் பெரும் பாணாற்றுப்படை நூலின் தலைவன். காஞ்சி மாநகரைத் தலைநகராகக்கொண்டு இவன் வழித் தோன்றல்கள் தொண்டைநாட்டை ஆண்டனர்.

தமிழகத்தின் வரலாற்றில் இருள் மண்டிய காலமான களப்பிரர் காலத்திற்குப்பிறகு தொண்டை மண்டலத்தைப் பல்லவமரபினர் கைப்பற்றித் தம் பேரரசை அமைத்தனர். ஏறத்தாழ 300 ஆண்டுக்காலம் வட தமிழகத்தைப் பல்லவப் பேரரசும், தென்தமிழகத்தைக் கடுங்கோன் வழிவந்த பாண்டியப் பேரரசும் ஆட்சி செய்தன. முடியுடை மூவேந்தருள் ஒருவராய் ஏற்றம் பெற்று விளங்கிய சோழமரபினர், பல்லவர்களுக்கடங்கிய சிற்றரசராய், பழையாறை நகரைத்தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தனர்.

கி.பி. 881-ல் நிகழ்ந்த திருப்புறம்பியம் போர், தமிழக வரலாற்றின் திருப்புமுனையாக அமைந்த போர். போரின் இறுதியில் பாண்டியப்பேரரசு தோற்றது. வெற்றி பெற்ற பல்லவப் பேரரசு தன் வலுவிழந்தது. வெற்றிக்குத்துணை நின்ற சோழ அரசு சுதந்திரம் பெற்றது. அறுநூறு ஆண்டுகள் தூங்கும் புலியாய் பதுங்கியிருந்த சோழப்புலி சீறியெழுந்தது.

பிற்காலச் சோழப்பேரரசை உருவாக்கிய பரகேசரி விசயாலயன் தஞ்சையைக் கைப்பற்றி சோழ அரசை அமைத்தான். அவன் மகனான இராசகேசரி முதலாம் ஆதித்தன் பல்லவ அரசை வீழ்த்தித் தொண்டைமண்டலத்தைச் சோழ அரசோடு இணைத்தான். முதலாம் பராந்தகனும், பேரரசன் இராசராசனும், அவன் மகன் இராசேந்திரனும் சோழப் பெரும் பேரரசை உருவாக்கினர். அந்தப் பேரரசை, அது தன் நிலைகுலைந்து போகாது, மேலும் இரண்டு நூற்றாண்டுகள் கட்டிக் காத்த பெருமை சாளுக்கிய சோழனான முதலாம் குலோத்துங்கனுக்கும் அவன் வழித் தோன்றல்களுக்குமே உரியது.

கி. பி. 11ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து கி. பி. 13ம் நூற்றாண்டின் பிற்பகுதிவரை சோழப் பேரரசின் படைத் தலைவர்களாகவும், அதிகாரிகளாகவும், தொண்டை மண்டலத்தின் ஒரு பகுதியின் காவல் அதிகாரிகளாகவும் விளங்கிய மரபினர் சம்புவரையர் ஆவர். இவர்களைப் பற்றிய குறிப்புக்களும், இவர்கள் அளித்த கொடைகளைப் பற்றியச் செய்திகளும் சோழ மன்னர்களின் கல்வெட்டுக்களில் இடம் பெற்றுள்ளன.

அக்குறிப்புக்களையும், அவை கூறும் வரலாற்று உண்மைகளையும், மன்னர் வரிசைப்படியும், அவர்தம் ஆட்சியாண்டு வரிசைப்படியும் தொகுத்து ஆராய்வோம்.

## இராசகேசரி முதலாம் குலோதுங்கசோழன் : (கி. பி. 1070—1120)

கல்வெட்டுக்களில் சம்புவரையர்களின் குடியான செங்கேணிகுடி பற்றியக் குறிப்பு முதன் முதலில் இடம்

பெற்றிருப்பது முதலாம் குலோதுங்கனின் பதினைந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில்தான் (கி.பி.-1085). செங்கை அண்ணா மாவட்டத்திலுள்ள கடப்பேரியில் உள்ள முதலாம் குலோத்துங்கனின் கல்வெட்டொன்றில் செங்கேணி சாத்தன் சோழனான சேனாபதிகள் வாணராயன் என்பான் திருவேங் கடம் உடையாருக்கு எழுப்பிய ஆலயம் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இவன் சம்புவரையர் மரபின் முன்னோ னாக இருக்கக்கூடும்.

## பரகேசரி விக்கிரம சோழன் : (கி.பி. 1118—1136)

கல்வெட்டுக்களில் சம்புவரையர்களின் பெயர் முதன் முதலில் குறிக்கப்பெற்றுள்ளது விக்கிரமசோழன் ஆட்சிக் காலக் கல்வெட்டுகளில்தான். வடஆற்காடுபகுதியின் சோழர் படைத்தலைவனாக இருந்த அம்மையப்பன் என்ற பெயருடைய இராசேந்திரசோழச் சம்புவராயன் என்பவன் சீயமங்கலம் கோயிலுக்கு நிவந்தங்கள் அவித்தான் என்ற செய்தி அக்கோயில் கல்வெட்டொன்றில் இடம் பெற்றுள்ளது. அவன் செங்கேணிகுடியில் பிறந்தவன் என்பதும் குறிப்பிடப் பட்டுள்ளது[2].

அவனுடைய உடன் பிறந்தான் பெயர் புக்கதுறை வல்லவனான அகளங்க சம்புவராயன். அவன் மதுராந்தகம் சிவன் கோயில் நுந்தா விளக்கெரிய 96 ஆடுகள் அளித் துள்ளான்,[3] என்ற செய்தி விக்கிரம சோழனுடைய 15-ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்றால் அறியப்படுகிறது. (கி.பி.-1133)

விக்கிரம சோழனின் 6வது ஆட்சியாண்டு (கி.பி.-1124), கல்வெட்டொன்று, வடஆற்காடு மாவட்ட, சேயாறுவட்ட

திருவோத்தூர் கோயில் இறைவனுக்கு செங்கேணி அம்மையப்பன்சீயன் என்பவன் நிவந்தங்கள் அளித்தான் என்ற செய்தியைக் கூறுகிறது[4].

விக்கிரம சோழனின் 16வது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்றில் செங்கேணி நாலாயிரவன் அம்மையப்பனான இராசேந்திரசோழச் சம்புவராயன் பற்றிய குறிப்புகள் வந்து உள்ளன.

## இராசகேசரி இரண்டாம் குலோத்துங்கசோழன் : (கி. பி. 1133—1150)

சோழப் பேரரசன் இரண்டாம் குலோத்துங்கசோழன் ஆட்சியில் தொண்டை மண்டலப்பகுதியின் காவல் தலைவனாக இருந்தவன் செங்கேணி அம்மையப்பன் கண்ணுடைப் பெருமாளான விக்கிரம சோழச் சம்புவரையன் என்பவனாகும். இவன் விக்கிரமசோழன் ஆட்சியில் படைத் தலைவனாக இருந்த செங்கேணி அம்மையப்பன் நாலாயிரவன் என்பவனுடைய மகனாவான். இவன் நியாய விசாரணைகளிலும் பொதுக் காரியங்களிலும் நாட்டாருடன் ஒத்துழைத்தவன். வடஆற்காடு மாவட்ட திருவல்லம்[5], சோழபுரம்[6] கோவில்களுக்கு நிவந்தங்கள் அளித்துள்ளான் என்பது அங்குள்ள கல்வெட்டுக்களால் புலனாகின்றது.

## பரகேசரி இரண்டாம் இராசராசசோழன் (கி. பி. 1146—1163)

இரண்டாம் இராசராசனின் ஆட்சியில் செங்கை—அண்ணா மாவட்டப் பகுதியின் காவல்புரியும் அதிகாரியாக இருந்தவன் அம்மையப்பன் சீயன் பல்லவாண்டானான இராச

நாராயண சம்புவராயன் என்பவன் ஆவான். இவன் அச்சிறுபாக்கம்[7], முந்தூர்[8] ஆலயங்களுக்கு நிவந்தங்கள் அளித்துள்ளான்.

இரண்டாம் இராசராசனின் 4வது ஆட்சியாண்டு கல்வெட்டொன்று, செங்கேணி வீராண்டான் மகன் அத்தியாண்டான் என்பவன் திருவோத்தூர் ஆலயத்திற்குத் திருவிளக்கு வைத்து அதற்கென 32 பசுக்களைத் தானமாக அளித்தான் என்ற செய்தியைக் கூறுகிறது[9].

இரண்டாம் இராசராசனின் 14ம் ஆட்சியாண்டு (1160) கல்வெட்டொன்று [10] செங்கேணி அத்தி மல்லனான எதிரிலிச் சோழச் சம்புவராயன் என்ற படைத்தலைவன் அளித்த தானங்களைப் பற்றிக்கூறுகிறது. திருவோத்தூர் ஆலயத்திற்கு இறையிலியாக அவன் அளித்த நிலங்கள் மாவண்டூர் ஏரிக்கருகே, சிற்றியாற்றூர் கிராமத்தைச் சார்ந்தவை என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

இரண்டாம் இராசராசனின் மற்றொரு கல்வெட்டு, அத்திமல்லன் கோயில் வழிபாட்டிற்கும், திருவிழாவிற்குமென 12,000 காசுகளை அளித்தான் என்று குறிப்பிடுகிறது.[11]

இரண்டாம் இராசராசனின் ஆட்சிக் காலத்தில் நித்த விநோதசம்புவராயன் என்பவன் மனைவியான சோறுடையாள் என்பவள், தென்னாற்காடு மாவட்ட பிரமதேசம் ஆலயத்திற்குத் திருவிளக்கு வைத்து அதற்கென 32 பசுக்களை தானமாக அளித்துள்ளாள் என்ற செய்தி குறிப்பிடத்தக்க ஒன்றாம்[12]

## இராசகேசரி இரண்டாம் இராசாதிராசசோழன்
## (கி. பி. 1163 - 1178)

இரண்டாம் இராசாதிராசன் ஆட்சிக்காலத்தில் செங்கை அண்ணா மாவட்டப் பகுதியின் படைத்தலைவனாக இருந்தவன் செங்கேணி அம்மையப்பனான எதிரிலி சோழச் சம்புவராயன் என்பவனாகும். அவன் திருப்புலிவனம் ஆலய வழிபாட்டிற்கும் திருப்பணிக்கும் என வரிப் பொருளை நிவந்தமாக அளித்தான் என்ற செய்தி இராசாதிராசனின் 4ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளது.

இப்படி அரசின் வரிப்பொருளை நிவந்தமாகத்தருவதற்கு அவன் மிகப்பெரிய அதிகாரியாகவும், அரசின் சார்பில் மிக முக்கிய உரிமைகளைப் பெற்றவனாகவும் இருந்திருக்க வேண்டும் என்பது திரு. நீலகண்டசாஸ்திரி அவர்களின் கணிப்பு[14].

இரண்டாம் இராசாதிராசன் ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டில் பராக்கிரம பாண்டியனுக்கும், குலசேகர பாண்டியனுக்கும் இடையே அரசுரிமைப் போர் தொடங்கியது. பராக்கிரம பாண்டியனுக்குத் துணையாக இலங்கைமன்னன் பராக்கிரமபாகு, தன் சிங்களப்படைகளை, இலங்காபுரத் தண்டநாயகன் என்பவன் தலைமையில் தமிழகத்திற்கு அனுப்பிவைத்தான். குலசேகர பாண்டியனுக்குத் துணையாக சோழர் படை சென்றது.

இராமேசுவரம், திருக்கானப்பேர், தொண்டி, பொன்னமராவதி, மணமேற்குடி போன்ற இடங்களில் நடந்த போர்களில் சிங்களப்படை வெற்றி பெற்றது. இப்போர் நிகழ்ச்சிகள் பற்றிய விவரங்கள் காஞ்சியையடுத்துள்ள ஆர்ப்பாக்கம் ஊரில்

உள்ள இராசாதிராசனது 5ம் ஆட்சியாண்டு (1168) கல்வெட்டொன்றில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.[15]

போரில் சிங்களவர் வெற்றிபெறவும், சோழர்படை தோல்வியுறவும் கண்டு, செங்கை-அண்ணா மாவட்டப் பகுதியின் படைத்தலைவனாக விளங்கிய செங்கேணி அம்மையப்பனான எதிரிலி சோழச் சம்புவராயன் என்பவன் மனம் வருந்தி, காஞ்சி மாநகருக்கருகேயுள்ள ஆர்ப்பாக்கம் என்ற இடத்தில் எழுந்தருளியிருந்த சுவாமித் தேவரான உமாபதித் தேவர் என்ற ஞானசிவதேவரிடம் சென்று இச்செய்திகளைக் கூறி, ''ஈழப்படை நம்சோழ நாட்டிற் புகுந்தால் ஆலயங்கள் அழிக்கப்பட்டுவிடுமே, பிராமணர்களும் பிறரும் துன்புறுவார்களே. ஆதலால் அச்சிங்களப்படை தோற்றோட வழிசெய்ய வேண்டுமென'', வேண்டினான். அவன் வேண்டுதலை ஏற்று ஈழப்படை தோற்ரோட வேண்டி 28 நாட்கள் இரவும் பகலும் இடைவிடாது அவர் அகோரத் தவம் புரிந்தார். சோழர்படை வென்ற செய்தி கேட்ட எதிரிலிச் சோழச் சம்புவராயன், ஞானசிவதேவருக்கு 167 வேலி பரப்புள்ள ஆர்ப்பாக்கம் என்ற ஊரை ஏகபோக இறையிலி நிலமாக வழங்கினான்.

ஆர்ப்பாக்கம் கல்வெட்டில் இடம் பெற்றுள்ள இந்த செங்கேணிஅம்மையப்பன் எதிரிலி சோழச் சம்புவராயன் என்பவனும், காஞ்சிபுரம் கல்வெட்டில்[16] குறிப்பிடப்பட்டுள்ள எதிரிலி சோழன் செங்கேணி அம்மையப்பனான சீயன்அம்மையப்பன் என்பவனும் ஒருவரே என்று திரு. நீலகண்டசாஸ்திரி குறிப்பிடுகிறார்[17].

ஆனால், ஆர்ப்பாக்கம் கல்வெட்டில் குறிப்பிட்டப்பட்டுள்ள செங்கேணி அம்மையப்பனான எதிரிலி சோழச் சம்புவராயன்

என்பவனும், திருப்புலிவனம் கல்வெட்டில்[18] இடம் பெற்றுள்ள செங்கேணி அம்மையப்பனான எதிரிலி சோழச் சம்புவராயன் என்பவனும் ஒருவரல்லர். இருவரும் வேறு வேறானவர் என்று திரு. நீலகண்ட சாஸ்திரி கருதுகிறார்.[19]

ஆர்ப்பாக்கம், திருப்புலிவனம் ஆகிய இரு கல்வெட்டுக்களிலும் இடம் பெற்றிருப்பவன் ஒரே சம்புவரையன்தான் என்று திரு. தி. வை. சதாசிவப்பண்டாரத்தார் சுட்டிக் காட்டுகிறார்[20].

இரண்டாம் இராசாதிராசன் படைத்தலைவர்களுள் ஒருவன் அம்மையப்பன் பாண்டி நாடு கொண்டானான கண்டர் சூரியன் சம்புவரையன் என்று பெயர் பெற்றுள்ளான். இவன் தென்னாற்காடு மாவட்டப் பகுதியின் காவல் அதிகாரியாக இருந்தவன் என்பது திரு. பண்டாரத்தார் அவர்களின் கணிப்பு[21].

'பாண்டி நாடு கொண்டான்'[22] என்ற அடைமொழி அவன் பாண்டிய நாட்டுப் போருக்குச் சென்ற சோணாட்டுப் படைத்தலைவர்களுள் ஒருவனாக இருந்திருக்க வேண்டும் என்பதைப் புலப்படுத்துகிறது.

இச்சம்புவரையன், நடுநாட்டுத் திருவக்கரையில் சூரியன் திருக்கோபுரம் என்னும் கோபுரம் எடுப்பித்துள்ளான்[23]. அங்கே கண்டர் சூரியன் என்ற ஆயிரக்கால் மண்டபமும் அமைத்துள்ளான்[24]. சிற்றாமூர்ச் சமணக் கோயிலுக்குப் பள்ளிச் சந்தமாக நிலம் அளித்துள்ளான்[25].

இரண்டாம் இராசாதிராசன் ஆட்சிக் காலத்தில் சிறப்பிடம் பெற்ற மற்றொரு தலைவன் செங்கேணி

அம்மையப்பன் பாண்டியான இராசராசசம்புவராயன் என்பவன்[26]. இவனும் பாண்டிய நாட்டுப் படையெடுப்பில் திறமையுடன் போர் புரிந்து மன்னனிடம் சிறப்புப் பட்டம் பெற்றவனாக இருந்திருக்கக்கூடும்.[27]

எதிரிலி சோழ சம்புவராயன், சிங்களப் படைகளுக்கெதிராகப் போரிட்டப் படைத் தலைவர்களுள் ஒருவன் என்று கிருஷ்ணசாமி அய்யங்கார் குறிப்பிட்டுள்ளார்[28].

இரண்டாம் இராசாதிராசனின் 11ம் ஆட்சியாண்டு கல்வெட்டொன்று[29] செங்கேணி குடும்பத்தின் பிரிவுகளுக்கிடையே ஏற்பட்ட அரசியல் ஒப்பந்தத்தை விளக்குகிறது. செங்கேணி அத்தியாண்டான் ராசேந்திரசோழ சம்புவராயன் என்பவனுக்கும் செங்கேணி மிண்டன் சீயன் என்பவனுக்கும் இடையே, அத்தியாண்டான் விக்கிரம சோழ சம்புவராயன் என்பவனுக்கு எதிராக ஏற்பட்ட ஒரு ஒப்பந்தத்தை அது விவரிக்கிறது.

பேரரசின் அனுமதியின்றி, அதற்குத் தெரியாமல், இத்தகைய ஒப்பந்தங்கள் நிறைவேறியது, சோழப் பேரரசில் மைய அரசு வலிமை குன்றிவந்ததையே காட்டுகிறது.

## பரகேசரி மூன்றாம் குலோத்துங்கசோழன் (கி. பி. 1178—1218)

மூன்றாம் குலோத்துங்கனின் 2ம் ஆட்சியாண்டு (கி. பி. 1180) கல்வெட்டொன்று[30] செங்கேணி அத்திமல்லன் அம்மையப்பன் என்பவன் திருவோத்தூர் இறைவனுக்கு திருவிளக்கு வைக்க 30 பசுக்களைத் தானமளித்ததை எடுத்துரைக்கிறது.

மூன்றாம் குலோத்துங்கனின் 14வது ஆட்சியாண்டு(கி.பி. 1192)கல்வெட்டு,[31] செங்கேணி வீரப்பெருமாள் அத்திமல்லன் எதிரிலி சோழச்சம்புவராயன் என்பவன் திருவோத்தூர் கோயிலுக்கு அளித்த நிவந்தங்களை எடுத்துரைக்கிறது.

மூன்றாம் குலோத்துங்கனின் 8ம் ஆண்டு(1186) கல்வெட்டொன்றில் செங்கேணி மிண்டன் அத்திமல்லன் சம்புவராயன் என்பான் திருவல்லமுடைய மகாதேவர்க்குக் குற்றத்தண்டம், திரிசூலக்காசு இவற்றால் கிடைக்கும் வருவாய்களைக் கொடுத்தனன் என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. இக் கல்வெட்டின் இறுதியில் செங்கேணிகள் வம்சம் உள்ள வரைக்கும் இத்தர்மத்தைச் செய்யாமல் நிறுத்துவோர் கங்கைக் கரையிலும் குமரிக் கரையிலும் குரால் பசுவைக் கொன்றவனது பாவத்தையடைவர் என்று வரையப் பட்டுள்ளது[32].

மூன்றாம் குலோத்துங்கனது 11-ம் ஆட்சியாண்டில் (கி.பி. -1189) செங்கேணி அம்மையப்பன் கண்ணுடைய பெருமாளான விக்கிரமச் சோழச் சம்புவராயன் பல வரிகளால் கிடைக்கும் வருவாய்களைத் திருவல்லமுடையாருக்கு அளித்துள்ளான்[33].

'செங்கேணி அம்மையப்பன் கண்ணுடைய பெருமாளான விக்கிரம சோழசம்புவராயனின் மகன், செங்கேணி விராசனி அம்மையப்பன் தனி நின்று வென்றான் தன்வசி காட்டுவான் அழகிய சோழனான எதிரிலி சோழச்சம்புவராயன் என்பவனாவன்' என்று திரு. பண்டாரத்தார் கருத்தறிவித்துள்ளார்[34]. அதற்கு ஆதாரமாக காஞ்சி அருளாளப் பெருமாள் கோயில் கல்வெட்டொன்றில்[35] 'அம்மையப்பன் மகன் சோழப் பிள்ளையான அழகிய சோழச்சம்புவராயன்' என்றிருப்பதைச் சுட்டிக் காட்டுகிறார்.

மூன்றாம் குலோத்துங்கனின் 33வது ஆட்சியாண்டு (கி. பி. 1211). கல்வெட்டொன்றில் கலவைக்குத் தெற்கே யுள்ள தட்டைச்சேரி என்ற பகுதியைச் சார்ந்த செங்கேணி அம்மையப்பன் அழகிய சோழனான எதிரிலி சோழச் சம்புவ ராயன் என்பவனைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. அவன் திருவோத்துருடைய நாயனாற்குத் தேவதானமாக இறையிலி நிலங்களை வழங்கினான் எனவும், அந்நிலங்கள் கலவை எனப்படும் ராஜநாராயண சதுர்வேதி மங்கலத்தைச் சார்ந்தவை என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது[36].

மூன்றாம் குலோத்துங்கனின் ஆட்சிக்காலக் கல்வெட்டுக் களில் குலோத்துங்க சோழ சம்புவராயன் என்பவன் சீய மங்கலம் கோயிலுக்கு இறையிலி நிலம் வழங்கினான் என்ற செய்தியும் [37], காணப்படுகிறது.

மூன்றாம் குலோத்துங்கனின் ஆட்சிக்காலத்திலும் அவன் ஆட்சிக்குட்பட்ட தலைவர்கள் தமக்குள் ஒப்பந்தங்கள் செய்து கொள்ளும் முறை நீடித்தது.

மடம் பகுதியில் உள்ள மூன்றாம் குலோத்துங்கனது 11ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று [38] செங்கேணி வீரசோழன் அத்திமல்லனான குலோத்துங்க சோழ சம்புவராயனும், கூடல் ஆளப்பிறந்தான் காடவராயனும், ஆளப்பிறந்தான் எதிரிலி சோழ சம்புவராயனோடு யாதொரு தொடர்பும் கொள்வது இல்லை என்று செய்து கொண்ட ஒப்பந்த விவரங்களை விளக்குகிறது.

செங்கம் பகுதியில் உள்ள மற்றொரு கல்வெட்டு, மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சிக் காலத்தில், மலையன் வினையை வென்றானான கரிகால சோழ ஆடையூர்

நாடாள்வார், இராசராசதேவன் விடுகாதழகிய பெருமாளான இராசராச அதிகைமான், செங்கேணி அம்மையப்பன் அத்தி மல்லனான விக்கிரம சோழச்சம்புவராயன் ஆகிய மூன்று ஆட்சித் தலைவர்களும் தமக்குள் செய்து கொண்ட ஒற்றுமை உடன்படிக்கையை விளக்குகிறது. இம்மூவரும் தம்முடைய பொது எதிரிகளான யாதவராயர், சீயகங்கர், குலோத்துங்கச் சோழசம்புவராயர் பிள்ளைகள் ஆகியோருடன் எந்த உறவும் கொள்ளுவது இல்லையென ஒப்பந்தம் செய்து கொண்டுள் ளனர். என்ற செய்தியைத் தருகிறது.[39]

மூன்றாம் குலோத்துங்கசோழனின் 20-ம் ஆட்சியாண்டு (1198) கல்வெட்டொன்று, செங்கேணி அம்மையப்பன் அத்தி மல்லனான விக்கிரம சோழசம்புவராயன் என்பவனும், மலையன் வினையை வென்றானான கரிகாலசோழ ஆடையூர் நாடாழ்வான் என்பவனும் தமக்குள் செய்து கொண்ட உடன்படிக்கை விவரங்களைக் கூறுகிறது. அவர்கள் இருவரும் பிறந்த பெருமாளான இராசராச அதியமான் என்பானுடன் எப்படிப்பட்ட உறவு முறை கொள்ள வேண்டும் என்பதற் கான விதிமுறைகளை அக்கல்வெட்டில் பொறித்துள்ளனர்.[40]

இக்கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டிருக்கும் உடன் படிக்கை விவரங்களை ஆராயும் போது ஒரு உண்மை புலனா கிறது. சம்புவரையர் மரபினர் செங்கேணி குடியைச் சார்ந் தவர்கள் என்று பொதுவாகக் கூறப்பட்டாலும், அவர்களுக் குள்ளே பிரிவுகள் இருந்தன என்பதும், தொண்டைமண்டலப் பகுதியில் ஒரே நேரத்தில் ஒன்றுக்கும் மேற்பட்ட செங்கேணி சம்புவரையர்கள் ஆட்சித் தலைவர்களாக தத்தம் பகுதியில் செயலாற்றி வந்துள்ளனர் என்பதும், அவர்களுக்கிடையே பகையும் உறவும் இருந்து வந்துள்ளன என்பதும் தெரிய வருகிறது.

அடுத்து, சோழப் பேரரசின் ஆட்சித் தலைவர்களுக் கிடையே இப்படிப்பட்ட ஒப்பந்தங்கள், உடன்படிக்கைகள் உருவானதற்குக் காரணம் சோழப் பேரரசின் மைய அரசு வலிமை குன்றியதும், அதைப்பயன்படுத்தி சில படைத் தலைவர்கள் தம் வலிமையை மிகுத்துக் கொண்டதுமேயாகும்.

மூன்றாம் குலோத்துங்க சோழனின் 27வது ஆட்சி யாண்டு கல்வெட்டொன்று அவனது ஆட்சிக் காலத்தில் அவனது ஆட்சித் தலைவர்களாக இருந்த பாண்டி நாடு கொண்டானான சம்புவராயன், அத்திமல்லன் பல்லவாண்டா னான குலோத்துங்க சோழ சம்புவராயன், பாவந் தீர்த்தா னான இராசேந்திர சோழ சம்புவராயன் ஆகியோர், சோழப் பேரரசனிடம் பேரன்பு கொண்டோரும், அவ்வரசனுக்குத் துணை நிற்போருமான பிற படைத் தலைவர்களுடன் செய்து கொண்ட சிறப்பான ஒரு ஒப்பந்தத்தைப் பற்றிய குறிப்பு களைத் தருகிறது. அவ்வொப்பந்தப்படி இத்தலைவர்கள் என்றென்றும் இராச காரியத்துக்குத் தப்பாமே நின்று பணி செய்வோமென்றும், அரசுக்கு எதிராகச் செயல்பட்டுவரும் மகதை நாடாள்வானான வாணகோவரையன் குலோத்துங்க சோழ வாணகோவரையன், இராசராச காடவராயர் ஆகியோருடன் அவர்கள் பக்கம் ஆளாதல், ஒலையாதல், போகக் காட்டுதல், உறவு பண்ணுதல், அறுதி செய்தல், செய்யக்கடவோம் அல்லாதோம் என்றும் உறுதிமொழியை மேற்கொண்டுள்ளனர் என்ற செய்தியையறிகிறோம்.

மூன்றாம் குலோத்துங்க சோழனுக்குப்பின் சோழப் பேரரசனான மூன்றாம் இராசராசசோழன் ஆட்சிக் காலத்தில் சோழப் பேரரசில் குழப்பத்தை உருவாக்கி, அப்பேரரசு நலிவுறவும், பாண்டியர் கைப்படவும் காரணமாக இருந்தவர் கள் இக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்ட காடவராயனான

சேந்தமங்கலம் கோப்பெருஞ்சிங்கனும், மகதை நாடாண்ட வாணகோவரயனும்தான் என்ற வரலாற்று உண்மை, வருமுன் காக்கும் முயற்சியில் சோழப் பேரரசை காக்கும் பணியில் இத்தலைவர்கள் செய்துகொண்ட ஒப்பந்தத்தின் சிறப்பை நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

## இராசகேசரி மூன்றாம் இராசராசசோழன் (கி. பி. 1216 - 1256)

மூன்றாம் இராசராசசோழனின் ஆட்சிக் காலத்தில் அவனுடைய 16வது ஆட்சியாண்டு (கி. பி. 1232) கல்வெட்டுக்களில் செங்கேணி அத்திமல்லன் சம்புவராய நாயனான எதிரிலி சோழச் சம்புவராயன் என்பவன் பற்றிய குறிப்புகள் உள்ளன.[42]

விரிஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ளதும், பொய்கை என்று தற்காலத்தில் அழைக்கப்படுவதுமாகிய இராசேந்திர சோழ நல்லூர் சித்திரமேழிமலை மண்டல விண்ணகரான அருளாளப் பெருமாளுக்குக் குமார மங்கலம், புத்தூர், அத்தியூர் ஆகிய கிராமங்களை, எதிரிலி சோழச் சம்புவராயன், மலைமண்டலத்து வணிகன் இராம கேரளச்செட்டியிடம் பொன் பெற்றுக் கொண்டு தேவதானமாக விட்டான் என்று பொய்கையிலுள்ள மூன்றாம் இராசராச சோழன் கல்வெட்டுக்கள் கூறுகின்றன[43]

மூன்றாம் இராசராசசோழனுடைய 17வது ஆட்சியாண்டு (கி. பி. 1233) கல்வெட்டொன்றில் விக்கிரமசோழ சம்புவராயன், வீரப்பெருமாளான எதிரிலி சோழ சம்புவராயர் ஆகியோருடைய செயல்கள் குறிப்பிடப்படுகின்றன.[44]

''சிற்றியாற்றையென்ற கிராமம் முன்னாளில் விக்கிரம சோழ சம்புவரையர் என்பவரால் தானமாக அளிக்கப்பட்ட ஊர்

பின்னாளில் தாமோதரன் பெரும்பானடி என்பவன், கண்ட கோபாலன் அனுமதியுடன் அக் கிராமத்தல் ஒரு பாதியைக் கோவில் தேவதானமாகத் திரும்பப் பெற்றான். மறுபாதி மடப்புறத்திற்கு அளிக்கப்பட்டது. இந்தப் புதிய ஆணை, வீரப் பெருமாளான எதிரிலி சோழ சம்புவராயர் அனுமதியுடன் பொறிக்கப்பட்டது'' என்ற செய்தியை அக்கல்வெட்டு எடுத்துரைக்கிறது.

அத்திமல்லன் சம்புகுலப் பெருமாளான இராச கம்பீரச் சம்புவராயன் என்பானும் மூன்றாம் இராசராச சோழனது 20-ம் ஆட்சியாண்டாகிய 1236ல் ஆட்சித் தலைவனாகயிருந் தான் என்று திரு. பண்டாரத்தார் குறிப்பிடுகிறார்.[15] அவன் எதிரிலி சோழச் சம்புவராயனது தம்பியாயிருக்கலாமென அவர் கருதுகிறார். இவ்விருவரும் ஒரே காலத்தில் ஆட்சித் தலைவர்களாக விளங்கியிருக்கக்கூடுமென அவர் குறிப்பிட்டுள்ளார்.

இராச கம்பீரச் சம்புவராயன், குன்றத்தூரை இராச கம்பீர நல்லூர் என்னும் பெயருடன் நிலவுமாறு பங்கள ராயர்க்குக் காணியாகக் கொடுத்தான் என்ற செய்தி கல்வெட்டில் இடம் பெற்றுள்ளது. இவன் பெயரால் இராச கம்பீரச் சதுர்வேதி மங்கலம், இராசகம்பீர நல்லூர் ஆகிய ஊர்கள் அமைக்கப்பட்டுள்ளன,

''இவன் ஆட்சிப் பகுதி இராச கம்பீரவிராச்சியம் என்ற பெயரை எய்தியது. இவன் படை வீட்டில் ஒரு மலைக் கோட்டையமைத்துத் தன் உறைவிடமாக்கினான். படை வீட்டினுள் அம்மையப்பேச்சுரர் ஆலயம் எடுப்பித்து அதற்கு நிபந்தங்கள் அளித்தான். இவனது தந்தையாகிய அம்மை யப்பன் கண்ணுடைய பெருமாளான விக்கிரம சோழச்

சம்புவராயனது பெயரே இவ்வாலயத்திற்கு இடப்பட்டது. இவன் சிலகாலம் சோழப்பேரரசுக்குத் திறை செலுத்தாமல் தன்னாட்சி புரிந்தான்'' என்று பண்டாரத்தார் குறிப்பிடுகின்றார்.[47]

மூன்றாம் இராசராச சோழன் ஆட்சிக் காலத்தில் குறுநில மன்னர்களும், அரசியல் தலைவர்களும், தம் அதிகாரங்களை நிலைபெறச் செய்து தன்னாட்சி செய்து வந்தனர் என்பது இங்கு நினைவு கொள்ளத்தக்கதாகும்.

## பரகேசரி மூன்றாம் இராசேந்திரசோழன் (கி. பி. 1246 - 1279)

சோழப் பேரரசின் கடைசி மன்னனான மூன்றாம் இராசேந்திரசோழனின் நண்பனாக விளங்கியவன், நெல்லூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட தெலுங்கு சோழனான வந்த நருபதி எனப் பெயர் பெற்ற கண்ட கோபாலன், சோழ மன்னனுக்கெதிராகக் கிளர்ச்சி செய்த சாம்புவராயன், சேதிராயன், காடவராயன் ஆகியோரை அடக்கினன் என்ற செய்தியைத் தெலுங்கு நூலாசிரியரான திக்கந சோமயாஜி என்பவர் 'நிர்வசனோத்தர ராமாயணம்' என்ற நூலுக்கு எழுதிய முன்னுரையில் குறித்துள்ளார்.[48]

மூன்றாம் இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியில் அவன் 'வீர ராட்சச விக்யா மருத்தா லங்கா ராம' - வீர ராட்சசர் மிகுந்த வட இலங்கையை வென்ற ராமன்' - என்று போற்றப்படுகிறான்.

தொண்டை மண்டல மாவிலங்கை பகுதியையாண்ட சம்புவரையரை இராசேந்திரன் வென்றிருக்கக் கூடும்

என பண்டாரத்தார் கருதுகிறார். சம்புவரையர் சிலர் தம்மை வீர ராட்சசர் என்றும் கூறிக் கொண்டுள்ளனர்.[49]

மாவிலங்கையைத் தலைநகராகக் கொண்டது ஓய்மா நாடு. சம்புவரையரின் முன்னோர் ஓய்மா நாட்டினராகவும் இருந்திருக்கக்கூடும். மாவிலங்கை, தென்னாற்காடு மாவட்டம், திண்டிவனத்தை அடுத்துள்ள ஒரு சிற்றூர்.

வடாற்காடு மாவட்ட, சேயாறு வட்ட காழியூர் பக்கத்தில் உள்ள ஒரு பகுதிக்கு மாவிலங்கைமேடு என்ற பெயரிடப் பட்டிருப்பதை 1533ம் ஆண்டு கல்வெட்டொன்று கூறுகிறது.[50]

## சோழப் பேரரசின் சரிவும் சம்புவரையர் நிலையும்

சோழ மன்னன் மூன்றாம் இராசராசன் ஆட்சிக்காலத்தில் சோழப்பேரரசு தன் சீருஞ் சிறப்பும் இழந்தது. சோழப்பெரும் பேரரசை, அதன் நிலைகுன்றாதவாறு தாங்கிப்புரத்தற்குரிய வீரமும் வலிமையும் இராசராசனுக்கு இல்லாது போனதே அப் பேரரசின் வீழ்ச்சிக்கு வழிவகுத்தது. சோழப் பேரரசின் மேற்கே போசளரும், தெற்கே பாண்டியரும் தம் பேரரசை உருவாக்கினர். வடஆற்காடு மாவட்டப் பகுதியில் இருந்த மகதநாட்டு வாணகோவரையனும், தென்னாற்காடு மாவட்ட திருமுனைப்பாடி நாட்டு, சேந்தமங்கலம் கோப்பெருஞ்சிங்கன் போன்றோர் தாமே தனியாட்சி நடத்த முயன்றனர்.

பாண்டிய மன்னனான முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் கி.பி. 1219, 1232 ஆண்டுகளில் இருமுறை சோழநாட்டின் மீது படையெடுத்து அதைக் கைப்பற்றினான். போரில் தோற்ற மூன்றாம் இராசராசன், காடவராயன் கோப்பெருஞ்சிங்கனால் சிறை பிடிக்கப்பட்டான்.

சோழ மன்னனின் துணைவரான போசளமன்னன் இரண்டாம் வல்லாளனும், அவன் மகன் வீரநரசிம்மனும் படையுடன் வந்து அவனை சிறைமீட்டனர். பாண்டியருக்குத் திறை செலுத்தும் சிற்றரசாக சோழப் பேரரசு தாழ்வுற்றது.

தொண்டை மண்டலப் பகுதியில் கோப்பெருஞ்சிங்கன் தனியாட்சி நடத்தத் தொடங்கினான். சம்புவரையரும் அவனாட்சிக்கு உட்பட்ட ஆட்சித்தலைவராக மாற்றப்பட்டனர்

மூன்றாம் இராசராசன் தன் ஏலாமையை உணர்ந்து 1246-ல் மூன்றாம் இராசேந்திரனுக்கு இளவரசு பட்டம் கட்டி அரசு பொறுப்பை ஒப்படைத்தான். சோழப் பேரரசின் கடைசி மன்னனான மூன்றாம் இராசேந்திரன் சிறந்த வீரன். தன் உயர்நிலை இழந்து தாழ்ந்து விட்ட சோழ அரசைத் தன் ஆற்றலால் மீண்டும் ஓரளவுக்கு நன்னிலைக்குக் கொண்டு வந்தான். பாண்டிய நாட்டின் மீது படையெடுத்துச் சென்று, இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனை வென்று அவனைச் சோழப் பேரரசுக்குத் திறை செலுத்தும் சிற்றரசனாக்கினான்.

மூன்றாம் இராசேந்திரன், தன் நண்பனான, நெல்லூரை யாண்ட தெலுங்கு சோழன் கண்டகோபாலன் துணையுடன் தனக்கடங்காது தனியாட்சி நடத்திவந்த கோப்பெருஞ்சிங்கன், சேதிராயன், சம்புவராயன் ஆகியவர்களை வென்றடக்கினான். வடதமிழகத்தின் ஆட்சிப் பொறுப்பை கண்ட கோபாலனிடமே ஒப்படைத்தான். காஞ்சியிலும், அதையொட்டிய தொண்டை மண்டலப் பகுதியிலும், மூன்றாம் இராசராசனது 29-ம் ஆட்சி ஆண்டான கி.பி. 1245-க்குப்பின் சோழமன்னர்களுடைய கல்வெட்டுக்கள் எதுவும் காணப்படவில்லையென்பதும், மாறாக, கண்டகோபாலனின் கல்வெட்டுக்கள் காணப்படுவதும் இதை உறுதி செய்கின்றன.

கண்டகோபாலன் சோழருடைய பிரதிநிதியாக இருந்து, காஞ்சியைத் தலைநகராகக்கொண்டு ஆண்டிருந்தான். சம்புவரையரும், கண்டகோபாலன் மேலாண்மையை ஏற்று ஆட்சித்தலைவராக விளங்கினர்.

## விசய கண்ட கோபாலன் ஆட்சியில் சம்புவரையர் (கி. பி. 1250—1280)

விசயகண்ட கோபால தேவரின் 27வது ஆட்சியாண்டு கல்வெட்டொன்றில், செங்கேணி வீரப்பெருமாள் கண்ட கோபாலனான குலோத்துங்க சோழ சம்புவராயன் திருவோத் தூருடைய நாயனாற்கு இரு திரு நந்தாவிளக்கு வைத்தான் என்ற குறிப்பு காணப்படுகிறது.[51]

'கண்டகோபாலான, சோழச்சம்புவராயன்' ஆகிய தொடர்கள், சம்புவரையர் சோழ மன்னருடைய மேலாண்மை யையும், அம்மன்னர் சார்பில் தொண்டை மண்டலம் ஆண்ட கண்டகோபாலனின் மேலாண்மையையும் ஏற்ற ஆட்சித் தலைவர்களாக விளங்கினர் என்பதையே எடுத்துக் காட்டு கின்றன.

கண்டகோபாலனின் 27வது ஆட்சியாண்டைச் சார்ந்த மற்றொரு கல்வெட்டு, (1277) திருவோத்தூர் ஆலயத்தைச் சார்ந்த தேவரடியாள் உண்ணாமுலையாள் மகள் சம்பா என்பவள் முன்னாளில் நாயனார் ஆளப்பிறந்தாரான இராச ராசசம்புவராயருக்கு விண்ணப்பம் செய்து பெற்ற திருமுகம் பற்றிய விவரங்களைக் கூறுகிறது. அத்திருமுகத்தை உறுதி செய்து கொடுத்தவன் செங்கேணி வீராகரன் ஆளப் பிறந்தானான இராசராசசம்புவரையன் என்றும் கூறப்பட்டு உள்ளது.[52]

கண்டகோபாலனின் 28-வது ஆட்சியாண்டு(கி.பி. 1278) கல்வெட்டொன்று, திருவோத்தூர் ஆலயத்தைச் சார்ந்த தேவரடியாள் அடிஞ்சாகை காத்தாள் மகள் செய்யாண்டை ஆன சம்புவராயநாச்சி என்பவள் முன்னாளில் நாயனார் ஆளப்பிறந்தாரான இராசராச சம்புவராயர்க்கு விண்ணப்பம் செய்து பெற்ற திருமுகம் பற்றிய விவரங்களைக் கூறுகிறது. அத்திருமுகத்தை உறுதி செய்து கொடுத்தவன் செங்கேணி வீராகரன் ராசராச சம்புவராயன் என்று கூறப்பட்டுள்ளது.[53]

வடஆற்காடு மாவட்ட, சேயாறு வட்ட அத்தி கிராம கரியபெருமாள் கோயிலில் உள்ள விசயகண்டகோபாலனின் 8-வது ஆட்சியாண்டுக் (1255) கல்வெட்டில் இராசராச சம்பு வராயர் என்பவர் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.[54]

அதே கோயிலில் உள்ள விசயகண்டகோபாலனின் 18வது (1268) ஆட்சியாண்டு கல்வெட்டில் ஆளப்பிறந் தாரான இராசராச சம்புவரையர் பற்றிய குறிப்புகள் காணப் படுகின்றன.[55]

காஞ்சிபுரம் கல்வெட்டொன்றில் சம்புவராயன் வீரப் பெருமாள் ஆளப்பிறந்தானான இராசராச சம்புவராயன் என்பவன் பற்றிய குறிப்புக்களும், வீரப்பெருமாள் எதிரிலி சோழச் சம்புவராயன் ஆளப்பிறந்தானசன ராசராச சம்பு வராயன் என்பவன், செங்கேணி வீராகரன் அம்மையப்பன் என்பவனின் பேரன் என்ற விவரமும் கொடுக்கப்பட்டுள்ளன.[56]

செய்யாறு வட்டத்தில் அத்தி என்ற சிற்றூரை அடுத்து உள்ள ஒரு சிற்றூரின் பெயர் வடஆளப்பிறந்தான் என்பது. அது ஆளப்பிறந்தானான ராசராச சம்புவராயன் பெயரை நினைவூட்டுவதாக அமைந்துள்ளது.

## சோழப் பேரரசின் வீழ்ச்சி :

மூன்றாம் இராசராசனது ஆட்சியின் பிற்பகுதியில் அது வரை அவன் துணைவராயிருந்த போசளர் பகைவராயினர். வீரநரசிம்மன் மகனான வீரசோமேசுவரன், சோழநாட்டின் மீது படையெடுத்து வந்து, பாண்டிய நாட்டை மீட்டு பாண்டியருக்களித்தான். திருச்சிக்கருகே கண்ணனூர் கொப்பத்திலிருந்து வீரசோமேசுவரன் மகனான வீரராமநாதன் ஆளத் தொடங்கினான்.

பாண்டிய பேரரசின் புதிய மன்னனான முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் 1257-ல் சோழநாட்டின் மீது படையெடுத்தான். மூன்றாம் இராசேந்திரனை முறியடித்து சோழ அரசை தனக்குத் திறைசெலுத்தும் சிற்றரசாக்கினான். மூன்றாம் இராசேந்திரன் 1279 வரை ஆண்டான். அவனுடன் சோழப் பேரரசு மறைந்தது. பாண்டியப் பேரரசின் ஒரு மாநிலமானது.

## சோழப் பேரரசும் சம்புவரையர்களும்

கி.பி. 11ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து, முதலாம் குலோத்துங்கசோழன், முதலாம் விக்கிரம சோழன் ஆட்சிக் காலம் தொட்டு, சோழப் பேரரசின் கடைசி மன்னனான மூன்றாம் இராசேந்திரன் காலம் வரை சோழப் பேரரசின் சயங்கொண்ட சோழ மண்டலமான தொண்டை மண்டலத்தின் ஒரு பகுதியினுடைய படைத்தலைவர்களாகவும், அரசு அதிகாரிகளாகவும், ஆட்சித் தலைவர்களாகவும் சம்புவரையர் விளங்கினர். அவர்கள் தன்னாட்சி நடத்தவில்லை.

தம்முடைய பேரரசர் பெயரைத் தம்முடைய சிறப்புப் பெயராக வைத்துக்கொள்ளும் வழக்கத்தைக் கொண்டு இருந்தனர்.

இராசேந்திர சோழ சம்புவராயன், அகளங்க சம்புவ ராயன், விக்கிரமசோழ சம்புவராயன், எதிரிலி சோழசம்புவ ராயன், இராசராசசம்புவராயன், குலோத்துங்க சோழச் சம்புவராயன் போன்ற பெயர்கள் இந்த உண்மையைப் புலப் படுத்தும்.

சோழப் பேரரசுக்கு எதிராக மகதை நாடாண்ட வாண கோவரையன், காடவராயர் போன்ற குறுநில மன்னர் தன்னாட்சி அமைக்க முனைந்தபோது அவர்களோடு எந்த வித உறவும் கொள்வதில்லை என்ற ஒரு உடன்படிக்கையை சம்புவரையர்கள் மற்ற மரபைச் சார்ந்த மலையமான், சேதி ராயர், கங்கரையர், மூவேந்தரையன், நாடாழ்வான், பிரதி கங்கன் ஆகியோருடன் செய்து கொண்டனர் என்பதை மூன்றாம் குலோத்துங்கனின் கல்வெட்டுகள் எடுத்துரைக் கின்றன[57].

சோழப்பேரரசின் ஆற்றல் அற்ற மன்னனான மூன்றாம் இராசராசன் ஆட்சிக்காலத்தில், தொண்டைமண்டலத்தைக் கைப்பற்றிய காடவராயன் கோப்பெருஞ்சிங்கன், சேதிராயர், மகதநாடாண்ட வாணகோவரையன் ஆகியோரொடு, சோழப் பேரரசனுக்கு எதிராகக் கூட்டு சேரவேண்டிய நிலைமை ஏற்பட்டபோதும், சம்புவரையர்கள் சோழப்பேரரசன் இராச ராசனுக்குக் கீழ்படிந்த ஆட்சித் தலைவர்களாகவே தம் கல்வெட்டிக்களில் குறித்தனர் என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும்.[58]

சோழப் பேரரசின் கடைசி பேரரசன் மூன்றாம் இராசேந் திரன் ஆட்சிக்காலத்தில், அவன் சார்பில் தொண்டை மண்டலம் தெலுங்கு சோழமன்னனான கண்டகோபாலனால் ஆளப்பட்டபோதும், தொடர்ந்து தம் கல்வெட்டுக்களை

சோழப் பிரதிநிதியாக கண்டகோபாலன் பெயரிலேயே அமைத்தனர் என்பதும் வரலாற்று உண்மைகள்.[59]

---

1. தென் இந்தியக் கல்வெட்டுக்கள், மடலம் 5 எண் 1003. கல்வெட்டு ஆண்டு அறிக்கை, 138/1896.
2. தெ. இ. க. மடலம் 7 எண் 67.
3. க. ஆ. அ. எண் 400.1922
4. க. ஆ. அ. எண் 86/1839 - 40
5. க. ஆ. அ. எண் 343 1912
6. தெ. இ. க மடலம் 3 எண் 61
7. தெ. இ. க. மடலம் 3 எண் 456
8. க. ஆ. அ எண் 52/1919, 71 1919
9. க. ஆ. அ எண் 76/1980
10. க. ஆ. அ. எண் 104/1939 - 40
11. க. ஆ. அ. எண் 112/1939 - 40
12. க. ஆ. அ. எண் 168/1918
13. க. ஆ. அ. எண் 393/1923
14. The Cholas,1974, P 373
15. தெ. இ, க. மடலம் 6, எண் 456, வரி 12-21.
16. க. ஆ. அ. எண் 7a 1893
17. The Cholas, 1974, P. 373
18. க. ஆ. அ. எண் 393 1923
19. The Cholas, 1974. P - 373
20. பிற்காலச் சோழர் வரலாறு, 1975, பக் 392
21. பிற்காலச் சோழர் வரலாறு, பக் 392
22. க. ஆ. அ. ஆண்டு 1918, பகுதி 2. பத்தி 39
23. க. ஆ. அ, எண் 195 1904
24. க. ஆ. அ. எண் 190 1904
25. தெ. இ. க. மடலம் 7 எண் 829

26. மேல்சேவூர் கல்வெட்டு எண் 222/1904
27. K. A. Nilakanda Sastri, The Pandyan Kingdam, P. 120
28. South India and her Muhammadan invaders, P - 16
29. க. ஆ. அ. எண் 100/1939 - 40
30. க. ஆ. அ. எண் 80/1900
31. க. ஆ. அ. எண் 108/1939 - 40
32. தெ. இ. க. மடலம் 4, எண் 60
33. தெ. இ. க. மடலம் 3, எண் 61
34. "சம்புவராய மன்னர்", தமிழ்ப்பொழில், துணர் 2, பக் 145
35. க. ஆ. அ. எண் 36/1893
36. தெ. இ. க. மடலம் 8 எண் 103
37. தெ. இ. க. மடலம் 7 எண் 66
38. க. ஆ. அ. எண் 254/1919
39. தெ. இ. க. மடலம் 7 எண் 119
க. ஆ. அ. ஆண்டு 1900, எண் 117
40. தெ. இ. க. மடலம் 7 எண் 127
க. ஆ. அ. ஆண்டு 1900, எண் 115
41. தெ. இ. க. மடலம் 7 எண் 106
க. ஆ. அ. ஆண்டு 1902 எண் 516
42. க. ஆ. அ. 112/1939 - 40, 89/1900
43. தெ. இ. க. மடலம் 1 எண் 49, 61, 62, 64
44. க. ஆ. அ. 106/1939 - 40
45. "சம்புவராய மன்னர்", தமிழ்ப்பொழில், துணர் 2, பக் 147
46. தெ. இ. க. மடலம் 1 எண் 74
47. "சம்புவராய மன்னர்", தமிழ்ப்பொழில், துணர் 2, பக் 143
48. K. A. Nilakanta Sastri, The Cholas, 1974, P-200
49. க. ஆ. அ. 58/1908
50. க. ஆ. அ. 76/1939 - 40
51. க. ஆ. அ. 108/1939 - 40

52. க. ஆ. அ. எண் 93/39 - 40
53. க. ஆ. அ. எண் 95/39 - 40
54. க. ஆ. அ. எண் 302/1912
55. க. ஆ. அ. எண் 303/1912
56. க. ஆ. அ. எண் 168/1939-40
57. தெ. இ. க. மடலம் 8 எண் 106
58. தெ. இ. க. மடலம் 8, எண் 94, 87, 80
க. ஆ. அ. 666/1919
59. தெ. இ. க. மடலம் 4, பக் 350, 358, 359.
க. ஆ. அ. எண் 343, 393, 428, 537, 538, ஆண்டு 1919

# 4. பாண்டியப் பேரரசில் சம்புவரையர்

களப்பிரர் பிடியினின்றும் தென் தமிழகத்தை மீட்டு கடுங்கோன் அமைத்த பாண்டிய அரசு, கி. பி. 881ல் திருப்புறம்பியம் போரில் பெற்ற தோல்வியினால் தன் சிறப்பையிழந்தது.

பேரரசன் முதலாம் இராசராசன் ஆட்சிக் காலத்தில் பாண்டியநாடு, இராசராசத் தென்னாடு என்று பெயரிடப் பட்டுச் சோழப் பேரரசின் மண்டலங்களில் ஒன்றாக இணைக் கப்பட்டது. சோழ இளவரசர்களில் ஒருவரையே, பாண்டிய நாட்டின் ஆட்சித் தலைவராக அமர்த்தி அவனுக்குச் சோழ பாண்டியன் என்ற சிறப்புப் பெயரை அளித்தவன் முதலாம் இராசேந்திரன் ஆவன்.

பாண்டிய நாடு சிதறுண்டு போய்ப் பல சிற்றரசர்களால் ஆளப்பட்டு வந்தது என்ற உண்மை, முதலாம் குலோத்துங்க சோழன், ஐந்து பாண்டியரை வென்றான் என்ற வரலாற்றுக் குறிப்புக்களாலும், இரண்டாம் இராசாதிராசன் ஆட்சிக் காலத்தில், மதுரைப்பாண்டிய மன்னனுக்கும், திருநெல்வேலிப் பாண்டிய மன்னனுக்கும் இடையே ஏற்பட்ட அரசுரிமைப் போரைப் பற்றிய குறிப்புக்களாலும் அறியப்படுகிறது. தொடர்ந்து மூன்றாம் குலோத்துங்க சோழன் ஆட்சிக்காலம் வரை, பாண்டிய மன்னர்கள், சோழப் பேரரசுக்கு அடங்கிய, திறை செலுத்திய சிற்றரசாகவே இருந்து வந்தது.

இந்த நிலையினின்று பாண்டிய அரசை மீட்டு அதைப் பேரரசாக்கியவன் கி. பி. 1216 முதல் 1238 வரை பாண்டிய நாடாண்ட முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனாவான். சோழமன்னன் மூன்றாம் இராசராசசோழனின் ஆற்றலின்மை

யால் வலுவிழந்து போன சோழநாட்டின்மீது அவன் 1219ல் படையெடுத்தான். தஞ்சையையும் உறையூரையும் எரியூட்டினான்

சோணாட்டை வென்று, மீண்டும் அதைச் சோழ மன்னனுக்கே அளித்தான். 'சோணாடு வழங்கியருளிய சுந்தர பாண்டியத்தேவர்' என்ற சிறப்புப் பட்டம் பெற்றான். சோழப் பேரரசைத் திறை செலுத்தும் சிற்றரசாக்கினான்.

கி.பி. 1232-ல் சோழ மன்னன் திறைசெலுத்தத் தவறியமையால் மீண்டும் ஒரு முறை சோழநாட்டின் மீது, சுந்தர பாண்டியன் படையெடுத்தான். சோழனைப் போரில் தோற்கடித்தான். ஆனால் சோழனுக்குத் துணையாக வந்த போசள மன்னன் வீரநரசிம்மனால் தோற்கடிக்கப்பட்டான். போசளருக்குத் திறை செலுத்தும் சிற்றரசாகப் பாண்டியநாடு மாற வேண்டிய நிலை ஏற்பட்டது.

முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனுக்குப் பின் அரியணையேறிய இரண்டாம் சடையவர்மன் குலசேகரப் பாண்டியன், இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆகியோர் திறமையற்றவர்கள். அதைப் பயன்படுத்திக் கொண்டு இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சிக் காலத்தில் சோழப்பேரரசின் கடைசி மன்னனான மூன்றாம் இராசேந்திர சோழன், பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து அதைக் கைப்பற்றினான். பாண்டியநாடு சோழப்பேரரசுக்குத் திறைசெலுத்தும் சிற்றரசானது. இந்நிலையில் பாண்டியருக்குத் துணையாக, போசளமன்னன் வீரசோமேசுவரன், சோழநாட்டின் மீது போர் தொடுத்தான். சோழனை வென்று பாண்டிய அரசை மீட்டான்.

இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனுக்குப் பின், பாண்டிய மன்னனாக கி.பி. 1251-ல் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் அரியணை ஏறினான்.

பெருவீரனான சுந்தரபாண்டியன் கி. பி. 1257ல் சோழ நாட்டின் மீது படையெடுத்து அதைக் கைப்பற்றினான். சோழ அரசை, பாண்டியப் பேரரசுக்குத் திறை செலுத்தும் சிற்றரசாக்கினான். சோழனுக்குத் துணையாக வந்த போசளரை முறியடித்தான். அவர்களுடைய கண்ணனூர் கொப்பாத்தைக் கைப்பற்றினான். சேந்தமங்கலம் காடவராயன் கோப்பெருஞ்சிங்கனை அடக்கினான்.

பின்னர், சோழ மன்னனின் நண்பனும், அவன் சார்பில் காஞ்சிமாநகரிலிருந்து தொண்டை மண்டலத்தை ஆட்சி செய்த தெலுங்குச் சோழனானக் கண்டகோபாலனை, நெல்லூருக்கருகே நடந்த போரில் வென்றான். கண்ட கோபாலனைக் கொன்று அவன் தலைநகரான நெல்லூரில் வீராபிஷேகம் செய்துக் கொண்டான். கி. பி. 1279ல் சோழ மன்னன் மூன்றாம் இராசேந்திரன் மறைவுக்குப் பின், சோழ நாடு, பாண்டியப் பேரரசின் மண்டலங்களில் ஒன்றாயிற்று. குமரி முதல் நெல்லூர் வரை பாண்டியப் பேரரசு விரிவடைந்தது.

சம்புவரையர் ஆட்சித் தலைவராய் விளங்கிய தொண்டை மண்டலமும் பாண்டியப் பேரரசின் நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதியானது. சோழப் பேரரசர்களின் படைத்தலைவர் களாகவும், அரசு அதிகாரிகளாகவும், அவர்களுக்கடங்கிய ஆட்சித் தலைவர்களாகவும் விளங்கிய சம்புவரையர்கள், சோழப்பேரரசு நலிவடைந்து பாண்டியப் பேரரசின் ஆட்சி தொண்டைமண்டலத்தில் நிலை பெற்றபோது அப்பாண்டியப்

பேரரசின் மேலாட்சியை ஏற்ற படைத்தலைவர்களாகவும் ஆட்சித் தலைவர்களாகவும் விளங்கினர். அம்மன்னர் பெயரிலேயே தம் கல்வெட்டுக்களை பொறித்தனர்.

### மாறவர்மன் சுந்தரபாண்டியன் :

மாறவர்மன் சுந்தரபாண்டியருடைய 12-வது ஆட்சி ஆண்டு கல்வெட்டொன்றில் வீரசம்பநாயனான சம்புவராயன் என்பவரைப் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. திருவோத்தூர் ஆலயத்திற்கு அவன் இறையிலியாக அளித்த நிலங்கள் பற்றியும், அதற்கென நிவந்தமாக அளித்த வரிப் பொருள்களைப் பற்றியும் விவரிக்கப்பட்டுள்ளது.[1]

### சடையவர்மன் வீரபாண்டியன் (கி. பி. 1297 - 1343)

வீரபாண்டியனுடைய 23-ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று திருவோத்தூரில் உள்ளது.[2] இதில் ஸ்வஸ்தி ஸ்ரீ குலசேகரச் சம்புவராயன் என்பவனுடைய ஓலை இடம் பெற்றுள்ளது. இதே குலசேகரச் சம்புவராயனுடைய ஓலை செய்யாறு வட்ட உக்கலில் உள்ள வீரபாண்டியனின் 26-ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டிலும் பொறிக்கப்பட்டுள்ளது.[3] வீரபாணடியனின் 22-ம் ஆட்சியாண்டு வரை பாண்டிய அரசனின் மேலாட்சியை ஏற்றிருந்த குலசேகரச்சம்புவராயன் அதற்குப் பிறகு உரிமை பெற்றத் தலைவனாகத் தன்னரட்சி நடத்தத் தொடங்கியிருக்கக்கூடும். அதையொட்டி தன் பெயரால் கல்வெட்டுக்களில் வழங்கிருக்கக்கூடும்.[4] கல்வெட்டுக்களில் தன் ஆட்சியாண்டைப் பொறித்த முதல் சம்புவராயன் அவன்தான்.[5] குலசேகரச்சம்புவராயனின் காலம் கி.பி. 1278-1304க்கு இடைப்பட்ட காலமாக இருக்கக் கூடும் என்பது கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்களுடைய கணிப்பு.[6]

சடையவர்மன் சுந்தர பாண்டியன் மறைவுக்குப் பின் முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியன் அரசனானான். கி.பி. 1258 லிருந்து 1311 வரை அவனாட்சி செய்தான். குலசேகரப் பாண்டியனுக்கு இரண்டு பிள்ளைகள் இருந்தனர். சடையவர்மன் சுந்தர பாண்டியன், சடையவர்மன் வீரபாண்டியன். இருவரில் வீரபாண்டியன், குலசேகரப்பாண்டியனுடைய அன்பைப் பெற்றவன் அவனே இளவரசனாகப் பட்டங் கட்டப்பட்டான். ஏமாற்றமடைந்த சுந்தரபாண்டியன் தந்தைக்கெதிராகக் கிளர்ச்சி செய்தான். தன் தந்தையையே கொன்று, ஆட்சியைக் கைப்பற்ற முயன்று தோற்றான். வீரபாண்டியன் பாண்டிய நாட்டு மன்னனான்.

நாடிழந்த சுந்தர பாண்டியன், டெல்லி சுல்தானியப் பேரரசனான அலாவுதீன்கில்ஜியின் உதவியைக் கோரினான். இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு சுல்தானிய அரசின் படைத்தலைவனான மாலிக்காபூர் தமிழகத்தின் மீது படையெடுத்தான். காஞ்சி முதல் இராமேசுவரம் வரை முஸ்லீம்களுடைய படை சூறாவளியாய் சுழன்று கொள்ளையடித்தது. வீரதவளப்பட்டினத்தில் இருந்த வீரபாண்டியன் முறியடிக்கப் பட்டான். மதுரையை விட்டு ஓடிய சுந்தரபாண்டியன், அவன் சிற்றப்பன் விக்கிரம பாண்டியன் துணையுடன் மாலிக்காபூரை முறியடித்து மதுரையைக் காத்தான்.

அரசிழந்த வீரபாண்டியன் இம்முறை அப்போதைய சுல்தானிய அரசன் முபாரக்ஷாகில்ஜியின் படைத்தலைவனான குஸ்ருகான் உதவியைக் கோரினான்.

குஸ்ருகான் தமிழகத்தின் மீது படையெடுத்து வர முயன்றான். அதற்குள் சுல்தானிய அரசில் ஏற்பட்ட குழப்பத்தால் அவன் சிறை பிடிக்கப்பட்டு டெல்லி கொண்டு செல்லப்பட்டான்.

பாண்டியர் இருவரிடையே ஏற்பட்ட போராட்டத்தை வாய்ப்பாகப் பயன்படுத்திக்கொண்டு சேர மன்னனான இரவி வர்மன் குலசேகரன், பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வந்து காஞ்சியையும் தொண்டை மண்டலப் பகுதிகளையும் கைப்பற்றினான்.[7]

பாண்டியப் பேரரசில் நிலவிய இக்குழப்ப நிலையில் அவர்க்கடங்கி இருந்த குறுநில மன்னர்கள் திறை தர மறுத்து தனியாக ஆட்சி புரியத்தொடங்கினார்கள்.

''அப்படி சுயேச்சையாகத் தம் நாட்டை ஆட்சி புரியத் தொடங்கியவர்கள் தொண்டை மண்டலத்து படைவிட்டு ராச்சியத்து சம்புவராயர்களும், பாண்டிய நாட்டிலிருந்த வாணாதிராயர்களும் ஆவர்'' என்று பண்டாரத்தார் அவர்கள் குறிப்பிடுகிறார்.[8]

கி. பி. 11ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து சோழப் பேரரசர்களின் படைத்தலைவர்களாகவும், ஆட்சித்தலைவர் களாகவும் விளங்கி, பிற்காலப் பாண்டியப் பேரரசிலும் தொடர்ந்து அதன் ஆணைக்குட்பட்ட ஆட்சித்தலைவர் களாகவும் விளங்கிய சம்புவரையர், கி பி. 14ம் நூற்றாண்டின் தொடக்கத்தில், பாண்டிய அரசில் ஏற்பட்ட குழப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு வரலாற்றில் முதல்முறையாக தன்னாட்சி நடத்தத் தலைப்பட்டனர்.

---

1. க. ஆ. அ. எண் 97/1900
2. க. ஆ. அ, எண் 92/1900
   தெ. இ. க. மடலம் 8 எண் 101
3. க. ஆ. அ. எண் 1561939-40
4. K. A. Nilakanta Sastri, The Pandyan Kingdom, P 188

5. க. ஆ. அ. எண் 77
6. South India and her Muhammadan invaders, P 17
7. க. அ. அ. எண் 33, 34 1911
8. பாண்டியர் வரலாறு, கழகம், 1969, பக். 151

# 5. சம்புவரையர் ஆட்சி

பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாண்டியப் பேரரசில் உருவான அரசுரிமைப் போராட்டம், அதன் விளைவாகத் தமிழ் மண்ணின் மீது அன்னியரான முசுலீம்கள் படையெடுப்பு ஆகியவற்றால் தமிழகம் முழுவதும் சீரழிந்தது. அரசியலிலும், சமுதாயத்திலும் பெருங்குழப்பம் ஏற்பட்டது. அந்த நிலையைத் தமக்கு வாய்ப்பாகப் பயன் படுத்திக் கொண்டு, அதுநாள் ரை திறை செலுத்திக் கொண்டிருந்த, ஆட்சித் தலைவர்களாயிருந்த, சம்புவரையர்கள், பாண்டியப் பேரரசின் மேலுரிமையைத் தவிர்த்து விட்டுத் தன்னாட்சி செய்யத் தலைப்பட்டனர், தொண்டை மண்டலத்து வட பகுதியில் முதலில் மரகத நகரம் என்றழைக்கப்படும் விரிஞ்சிபுரத்தையும், பிறகு காஞ்சிமா நகரையும் தலைநகராகக் கொண்டு அவர்கள், தம படைவீட்டு ராச்சியத்தை ஆட்சி செய்தனர்.

தனியாட்சி செய்த சம்புவரையர் என வரலாற்றில் இடம் பெற்றிருப்பவர்கள், வீரசம்பன், முதலாம் வென்று மண்கொண்டான் என்றழைக்கப்படும் ஏகாம்பரநாத சம்பு வரையன், இராசநாராயண சம்புவரையன், இரண்டாம் வென்று மண்கொண்ட சம்புவரையன் ஆகிய நால்வர் ஆவர். இவர் ஆட்சி செய்த காலம் கி. பி. 1311லிருந்து குமார கம்பணனால் இரண்டாம் வென்று மண் கொண்ட சம்புராயர் தோற்கடிக்கபபட்டு காஞ்சி கைப்பற்றப்பட்ட கி. பி. 1363க்கு இடைப்பட்ட ஐம்பதாண்டு காலமாகும் கி. பி. 1351ல் விசய நகர இளவரசன் குமார கம்பணனின் முதல் படையெடுப்புக்குப்பின் தொண்டை மண்டலத்தில் விசய நகரப் பேரரசின் பிரதிநிதியாப் படைத்தலைவன் சாவண்ணன் ஆட்சி செய்தான் என்பதையும், அவ்விசய

நகரப் பேரரசுக்குத் திறை செலுத்தும் ஆட்சித்தலைவர் களாகவே இராசராச சம்புவரையனும், இரண்டாம் வென்று மண் கொண்டானும் செயல்பட்டனர் என்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

## வீரசம்பன்

குலசேகர சம்புவரையனுக்குப்பின் ஆட்சி செலுத்தியவன் வீரசம்பன் என்று கிருஷ்ணசாமி அய்யங்கார் கணித்துள்ளார். இவனுக்கு இராசநாராயண மல்லிநாதன் என்ற பெயரும் உண்டு. இவனுக்கும் குலசேகர சம்புவரையனுக்கும் இடையே உள்ள உறவு முறை தெரியவில்லை. இவன் குலசேகர சம்புவரையனின் மகனாக இருக்கலாம் என்பது அவர் கருத்து.[1]

'இரட்டைப் புலவர்கள் இயற்றிய' ஏகாம்பரநாதன் உலா'வில் இவனது பெயர்கள் இடம் பெற்றுள்ளன.[2]

வீரசம்பன் அளித்த கொடைகளைப் பற்றிய குறிப்புகள் கல்வெட்டுக்களிலும இலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ளன. வடஆற்காடு மாவட்டத் திருவல்லத்தில் உள்ள கல்வெட் டொன்றில் வீரசம்பன் வழங்கிய நிவந்தங்கள் பற்றிய குறிப்புக்கள் உள்ளன.[3] காஞ்சி அருளாளப் பெருமாளுக்கு, வீரசோழன் மகன் வீரசம்பன் என்பவன் புதிய தேர் ஒன்றைக் கொடையாக அளித்தான் என்ற குறிப்பு உள்ளது[4]. இவன் சம்புவராயர் மரபினன் என்று பண்டாரத்தார் கருதுகிறார்[5].

காஞ்சி ஏகாம்பரநாதர் ஆலயத்திறைவர்க்கு இவன் பொன் மகுடம் அணிவித்தான்[6], அக்கோயிலுக்குத் தேர் அளித்தான்[7], அங்கே துலாபார மண்டபம் அமைத்தான்[8] என்று ஏகாம்பரநாதர் உலா போற்றுகிறது.

வீரசம்பனின் வேண்டுதலை ஏற்று அவன் உதவியுடன் ஞானாத்மன் என்ற ஞானி திருவல்லம் கோயிலில் பத்ரமண்டபம் என்ற பெயரில் ஒரு மண்டபத்தை அமைத்தார் திருவல்லம் நகரில் ஒரு ஆலயத்தை உருவாக்கி அதற்கு 'மாராய சிவனாலயம்' என்று பெயரிட்டார்.[9]

வீரசம்பனின் அமைச்சராக இருந்தவர் வானாபிதன் என்பவர். அவர் வடமொழிப் புலவர் வீரசம்பனின் சிறப்புக் களைக் கவிதையில் வடித்தார்.[10]

சம்புவரையர்களில் முதன் முதலில் தமக்கென நாணயத்தை வெளியிட்டவன் இந்த வீரசம்பனே ஆவார்.[11] அவர் வெளியிட்ட நாணயம் வீரசம்பன் குளிகை என்ற பெயரால் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளது.[12] இந்த நாணயங்கள் வீரசம்பன் ஆட்சிக்குப்பின் 50 ஆண்டுகாலம் வரை புழக்கத்தில் இருந்தன. உக்கலில் உள்ள ராசநாராயண சம்புவராயனின் கல்வெட்டொன்றில் இந்நாணயம் 'அன்றாடு வழங்கும் வாசி படாவராகன் நற்பணம் வீரசம்பன் குளிகை' என்று குறிக்கப்பட்டிருக்கிறது.[13]

பிலானனாதீஸ்வரர் கல்வெட்டில் வீரசம்பன் பட்டப் பெயராக 'நித்திரவாசன் விஜயி' என்று குறிப்பிடப்பட்டிருக் கிறது. உறக்கத்திலும் வெற்றி குவிப்பவன் என்று பொருள் படும் இந்தப் பட்டமும், தன்பெயரால் அவன் நாணயங்களை வெளியிட்ட செயலும் தொண்டைமண்டலப் பகுதியில் வீரசம்பன் தன்னாட்சி அமைத்திருந்தான் என்பதற்குச் சான்றாக அமைகிறது என்று கிருஷ்ணசாமி அய்யங்கார் சுட்டிக்காட்டுகிறார்.[14]

## வீரசம்பனும் முஸ்லீம் படையெடுப்பும்:

தொண்டை மண்டலத்தில் வீரசம்பன் தன்னாட்சி அமைத்திருந்த நேரம், தென்னக வரலாற்றில் இருள் சூழ்ந்த காலம். முஸ்லீம்கள் படையெடுப்பால் தமிழகம் அலைக் கழிக்கப்பட்டகாலம். சுந்தரபாண்டியனின் அழைப்பால் முதன் முதலாகத் தமிழகத்தில் நுழைந்த மாலிக்காபூரின் முசுலீம் படைகள் தமிழகத்தைச் சூறையாடின கோயில்கள் கொள்ளை யடிக்கப்பட்டன. மக்கள் படுகொலைக்காளாயினர். மன்னர்கள் நாட்டை விட்டு ஓடினர். இந்தப் படையெடுப்பிற்குப்பின் மாலிக்காபூர் டெல்லிதிரும்பியபோது 612யானைகள், 20,000 குதிரைகள் 90,000 மணங்கு பொன்னும், முத்துக்களும், அணிகளும் அடங்கிய பெட்டிகள் ஆகியவற்றைக் கொள்ளை யடித்துச் சென்றான் என்று இசுலாமிய ஆசிரியரான சயாவுதீர்பார்னி குறிப்பிடுகிறார்.[15]

'அன்னிய இனத்தவரான மாலிக்காபூர் அடித்த கொள்ளைகளையும், கொடுமைகளையும், படுகொலைகளை யும், பேரழிவினையும் கண்டும் அவைகளைத் தடுக்கவோ. அப்படைகளுக்கெதிராக செயல்படவோ வீரசம்பன் முயற்சிக்க வில்லை என்பது வரலாற்று உண்மை. 'வருந்தத் தக்க உண்மை' என கிருஷ்ணசாமி அய்யங்கார் சுட்டிக் காட்டு கிறார்.[16]

அந்தப் படைகளைத் தடுக்கும் வலிமையற்றுத் தன்னையே காத்துக் கொள்ள வேண்டிய இக்கட்டான நிலையில் வீரசம்பன் இருந்திருக்க வேண்டும்.

## ஏகாம்பரநாத சம்புவராயன் அல்லது வென்று மண் கொண்ட சம்புவராயன்

வீரசம்பனுக்குப் பின் படைவீட்டுராச்சியத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றவர் ஏகாம்பரநாத சம்புவராயன் என்று

கருதப்படுகிறது. இவர் தன்னுடைய இயற்பெயரான ஏகாம்பரநாதர் என்பதை விட, சிறப்புப் பெயரான வென்று மண் கொண்ட சம்புவராயர் என்ற பெயராலேயே கல்வெட்டுக் களில் குறிப்பிடப்படுகிறார். குட்டியம் பகுதியில் காணப்படும் ஒரு கல்வெட்டில் மட்டுமே ஏகாம்பரநாதன் என்ற பெயர் குறிக்கப்பட்டுள்ளது. [17]

இந்த ஏகாம்பரநாதன், காஞ்சிமாநகரைத் தலைநக ராகக்கொண்டு தொண்டை மண்டலப் பகுதியை ஆட்சி செய்தவனாக இருக்கவேண்டும். தமிழில் உள்ள சிற்றிலக் கியங்களில் ஒன்றான 'ஏகாம்பரநாதர் உலா' என்ற நூல் இரட்டைப் புலவர்களால் இயற்றப்பட்டது. அந்நூல் காஞ்சி ஏகாம்பரநாதர் ஆலய இறைவன் மீது இயற்றப்பட்டது எனக் கருதப்படுகிறது. நீலகண்ட சாஸ்திரி அவர்கள், அவ்வுலா நூல் காஞ்சியைத் தலைநகராகக்கொண்டு ஆட்சிசெய்த ஏகாம்பரநாதன் என்பவரைத் தலைவனாகக்கொண்டு இயற்றப்பட்டதாகவும் இருக்கலாம் என்று கருதுகிறார்[18]. ஏகாம்பரநாதர் உலாவில் பலவரிகளில் 'சம்பு குலம', 'வேற் சம்பன்', 'மல்லிநாதன்', 'சம்புபதி', 'சம்பன', பல்லவன் சம்பு' 'குலப்பெருமாள்' போன்ற சம்புவரையர் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

'வென்று மண் கொண்டான்' என்ற சிறப்புப்பெயரை இச் சம்புவராயன் தன் ஆட்சியின் தொடக்கத்திலேயே மேற் கொள்கிறான்.

தமிழகத்தின் மீது படையெடுத்து வந்த முஸ்லீம்படை களை வென்று தன் நாட்டை மீட்டதின் அடையாளமாக அவன் இப்பட்டத்தைப் பெற்றிருக்கக்கூடும் என்று

திரு. வெங்கடரமணய்யா அவர்கள் கருத்து தெரிவிக்கிறார், "வென்று மண்கொண்டானின் ஆட்சிபற்றிய குறிப்புகள் அவனுடைய 14வது ஆட்சியாண்டிற்கு முன் எங்கும் கிடைக்கவில்லை. எனவே ஏகாம்பரநாத சம்புவரையர் தன் நாட்டை முசல்மான்களின் பிடியிலிருந்து மீட்டிருக்கக்கூடும் என்று கருதுவதில் தவறில்லை" என்பது அவருடைய கருத்து[19].

அவரது இந்த முடிவு சரியானதல்ல என்று பிற ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். "திரு. வெங்கட்ரமணய்யா வின் இந்தக் கணிப்பு, வென்று மண்கொண்டானின் கல்வெட்டுக்கள், அவனது 14வது ஆட்சியாண்டுக்கு முன் கிடைக்கவில்லை என்ற தவறான எண்ணத்தால்ஏற்பட்டது. அவனது 2-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று குன்னத்தூரில் கிடைத்துள்ளது[20] என்று, கங்காதேவி இயற்றிய வடமொழிக் காவியமான 'மதுரா விஜயம்' நூலை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ள திரு திருவேங்கடாச்சாரியார் தெளிவு படுத்துகிறார்.

மேலும் வீரசம்பனின் ஆட்சிக்காலத்தின் முடிவுக்கும், வென்று மண்கொண்டானின் ஆட்சிக் காலத்தின் தொடக்கத் திற்கும் இடையே இடைவெளி எதுவுமில்லை. கி.பி. 1322-23ம் ஆண்டே வீரசம்பனின் ஆட்சிக் காலத்தின் இறுதி யாண்டாகவும், வென்று மண்கொண்டானின் ஆட்சியின் முதலாண்டாகவும் அமைந்துள்ளது.

இந்த சிக்கலை வேறொரு கோணத்திலிருந்தும் ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ந்துள்ளனர். சோழப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு காஞ்சி மாநகரும், தொண்டை மண்டலமும் பாண்டிய மன்னரின் ஆட்சியின் கீழ் வந்தன.

சேரமன்னனான இரவிவர்மன் குலசேகரன் என்பவன், பாண்டிய மன்னரிடமிருந்து காஞ்சியைக் காப்பாற்றினான்.

சேரமன்னன் தொண்டை மண்டலத்திலிருந்து தன்நாடு திரும்பியபின், கி.பி 1317ம் ஆண்டளவில் வாரங்கல் நகரைத் தலைநகராகக்கொண்டு தெலுங்கானா பகுதியை ஆண்ட காகதீய மன்னனான பிரதாபன் என்பவன், தன்படைகளைப் படைத்தலைவன் முப்பிடிநாயகன் தலைமையில் தமிழகத்திற்கு அனுப்பினான். முப்பிடிநாயகனுடைய படைகள் காவிரிக் கரைவரை சென்றன. காஞ்சிநகரம் கைப்பற்றப்பட்டு அங்கே ஒரு தெலுங்கு அரசபிரதிநிதி அமர்த்தப்பட்டான்.[21]

வாரங்கல் காகதீயப் படைத்தலைவன் முப்பிடிநாயகன் பிடியிலிருந்து காஞ்சி நகரத்தையும் தொண்டை மண்டலத்தையும் வென்று மண்கொண்டான் மீட்டிருக்கக்கூடும் அதைச் சிறப்பிக்கும் வகையில் இச்சிறப்புப் பெயரைப் பெற்றிருக்கக்கூடும்.

## முஸ்லிம் படையெடுப்பும், வென்று மண்கொண்ட சம்புவராயன் நிலையும்.

வென்று மண் கொண்டானின் ஆட்சி கி.பி. 1322-ல் தொடங்குகிறது. அவனுடைய 3-வது ஆட்சியாண்டு முதல் 14-வது ஆட்சியாண்டு வரை (கி.பி 1335-36) அவனரசிட்யைப் பற்றிய கல்வெட்டுக்கள் கிடைக்கவில்லை. இதற்குக்காரணம் 1323-ல் தமிழகத்தைச் சூறையாடிய முஸ்லீம் படையெடுப்பும் அழிவுகளும்தான்.

## டெல்லியின் துக்ளக் மரபின் ஆட்சி :

டெல்லி சுல்தானியப் பேரரசில் கில்ஜி மரபின் ஆட்சி முடிந்து கி.பி. 1320-ல் துக்ளக் மரபினர் தம் ஆட்சியை அமைத்தனர்.

துக்ளக் மரபின் முதல் மன்னனான கியாசுதீன் துக்ளக், தன் மகன் உலுக்கன் (பின்னாளில் முகமது பின்-துக்ளக்) தலைமையில் படைகளைத் தென்னகத்திற்கு அனுப்பினான். உலுக்கானின் படைத்தலைவனான மஜிர் அபுரிஜா என்பவன் தமிழகத்தின் மீது படையெடுத்தான். தமிழகம் முழுவதும் சூறையாடப்பட்டன.

மதுரை நகரம் முஸ்லீம் படைகளால் கைப்பற்றப்பட்டது. பாண்டியன் பராக்கிரமதேவன் என்பவன் 1362-ல் போரில் தோற்று சிறைப்பட்ட நிலையிலேயே டெல்லிக்குக் கொண்டு செல்லப்பட்டான். பாண்டியர் ஆட்சி மதுரையில் இடம் பெறாது போனது. மதுரையில் துக்ளக் அரசின் பிரதிநிதி யாக ஜலாலுதீன் அசன்ஷா என்பவன் அமர்த்தப்பட்டான்.

உலுக்கான் 1325-ல் முகமது-பின்-துக்ளக் என்ற பட்டத்தோடு டெல்லி சுல்தானியத்தின் பேரரசனானான். அவனது ஆட்சியின் தொடக்கத்திலேயே தமிழகம் டெல்லிப் பேரரசின் தென்மாநிலங்கள் ஐந்தில் ஒன்றானது. மாபார் என்ற பெயருடன் தமிழகம் டெல்லி சுல்தானிய அரசின் ஒரு மாநிலமாக்கப்பட்டது.

1326 முதல் 1336 வரை ஜலாலுதீன் டெல்லி துக்ளக் பேரரசின் பிரதிநிதியாக மாபார் அல்லது தமிழகப் பகுதியை ஆண்டான். டெல்லி பேரரசில் ஏற்பட்ட உட்குழப்பங்களும், தொலை தூரத்திலிருந்த டெல்லியிலிருந்து தென்னகப் பகுதிகளை கட்டிக்காக்க முடியாமையாலும் பெரும்பாலான தென் மாநில முஸ்லிம் பிரதிநிதிகள் தன்னாட்சி நடத்தத் தொடங்கினர். மதுரையில் துக்ளக் அரசின் பிரதிநிதியாக இருந்த ஜலாலுதீன் அசன்ஷாவும், துக்ளக் அரசின் பிடியி னின்று விடுவித்துக்கொண்டு சுல்தான் என்ற பட்டத்தோடு மதுரையில் ஒரு சுல்தானிய அரசை கி.பி. 1336ல்

அமைத்தான். மதுரை சுல்தானிய அரசு 1377 வரை சிதம்பரம் வரையிலான தமிழகப்பகுதியினை ஆட்சி செய்தது.

தமிழகம் முழுவதும் முஸ்லிம்களால் ஆளப்படவில்லை என்றாலும் தமிழகத்தின் அரசியல்வாழ்வு குலைக்கப்பட்டது. தமிழகமெங்கும் முஸலிம் படைவீரர்கள் கொள்ளையடித்தனர். கோயில்கள் அவர்களுடைய வேட்டைக் காடுகளாயின.

இப்படிப்பட்ட சூழ்நிலையில்தான், வென்று மண் கொண்டான் தன் ஆட்சியைத் துவக்கினான், தனக்கு முன்பு ஆட்சிப் பொறுப்பில் இருந்த வீரசம்பனனைப் போன்றே இவனாலும் முஸ்லீம்களின் சூறாவளித் தாக்குதலைத் தடுத்து நிறுத்த முடியவில்லை.

வென்று மண்கொண்டானின் 14வது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று அவனது நாட்டில் முஸ்லிம் படையெடுப்பால் விளைந்த அழிவுகளையும் இன்னல்களையும் எடுத்துரைக்கிறது[23]. அவனையடுத்து ஆட்சிப் பொறுப்பு ஏற்ற இராசநாராயணின் கல்வெட்டுக்களிலும் முஸ்லிம் படையெடுப்பால் விளைந்த அழிவுகள் விவரிக்கப் பட்டுள்ளன[24].

1335-36-ஆம் ஆண்டளவில் வென்று மண்கொண்டான் மீண்டும் தன் ஆட்சியைப் பெற்றுள்ளான் என்பதை அவனுடைய 14-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்கள் புலப்படுத்துகின்றன.

முஸ்லீம் படையெடுப்பின் விளைவாகத் தமிழ்நாடு சிதறுண்டு போயிற்று. அரசியலில், பொருளாதாரத்தில், சமுதாய அமைப்பில் பெரும் குழப்பங்கள் உருவாயின.

படையெடுப்புக்கும் உயிருக்கும் அஞ்சி மக்கள் இடம் விட்டு இடம் பெயர நேரிட்டது.

இந்த முஸ்லீம்கள் படையெடுப்பால் தென்தமிழகப் பகுதி பாதிக்கப்பட்ட அளவு தொண்டை மண்டலப் பகுதி இன்னலுக்கு ஆளாகவில்லை. இது ஏன் என்பது ஒரு வரலாற்றுப் புதிராகவே உள்ளது. மதுரையில் சுல்தானிய அரசு அமைக்கப்பட்டபோதும் வென்று மண்கொண்டானின் ஆட்சிப் பகுதி அவர்களால் கைப்பற்றப்படவில்லை. பெருவெள்ளம் வரும்போதெல்லாம் வெள்ளத்தின் போக்கோடு சாய்ந்து, வெள்ளம் வடிந்தபின் தலைநிமிரும் நாணல் போல சம்புவரையர் தம்மைக் காத்துக் கொண்டிருக்கக்கூடும்.

முஸ்லீம் படையெடுப்பையும் ஆதிக்கத்தையும் எதிர்க்க அணிதிரண்ட ஏனைய இந்து அரசுகளான காம்பிலி, போசள கலிங்க, நாயக அரசுகளைப் போலல்லாமல் சம்புவரையர் முஸ்லீம் அரசோடு அனுசரித்துப்போகும் கொள்கையைக் கடைப்பிடித்து தம்மைக்காத்துக் கொண்டிருக்கவும் கூடும்.

தென்னகப் பகுதியில் முஸ்லீம் அரசு உருவாக்கப்பட்ட நேரத்தில், தென்னகத்தின் இந்து அரசர்களும் தலைவர்களுமாக 70 பேர் ஒரு அணியமைத்தனர். காபய நாயகன், புரோலயவேமன், சோமதேவன், போசள மன்னனான மூன்றாம் வல்லாளன், காம்பிலியாண்ட ஹரிஹரன் புக்கன், ஆகியோர் தலைமையில் முஸ்லீம் ஆதிக்கத்திலிருந்து தென்னகத்தை மீட்க ஒரு இந்து கூட்டமைப்பு உருவாயிற்று. கி.பி. 1336ல் உருவான இந்தக் கூட்டமைப்பில் தமிழகத்தின் வடப்பகுதியை ஆட்சி செய்த ஒரே இந்து ஆட்சியாளரான வென்றுமண்கொண்டான் தன்னை இணைத்துக்கொள்ளவில்லை என்பது வருந்தத்தக்கதே. அந்தக் கூட்டமைப்பின்

விளைவாக உருவானதுதான் ஹரிஹரபுக்கர்அமைத்த இந்துப் பேரரசான விசயநகரப் பேரரசு.

முஸ்லீம் ஆதிக்கத்தின் கொடுமையால் தென்தமிழகப் பகுதிகளிலிருந்து ஏராளமான மக்கள் புகலிடம்தேடி வென்று மண்கொண்டானின் நாட்டிற்கு வந்து குவிந்தனர் என்று கீழ் மின்னல் கல்வெட்டு குறிப்பிடுகிறது.[26]

இப்படிப் புகலிடம் தேடிவந்த மக்களுக்கு மறு வாழ்வுக்கு வழிசெய்யவேண்டிய கட்டாயம் சம்புவரையனுக்கு ஏற்பட்டது. அகதிகள் புகலிடங்கள் அமைக்கப்பட்டன. வாலாஜாபேட்டைக்கருகில் உள்ள கீழ் மின்னல் பகுதி அஞ்சினான் புகலிடமாக மாற்றப்பட்டு, இராசநாராயணனின் சிறப்புப் பெயரான பொன்னின் பெருமாள் என்று பெயரிடப் பட்டது.[27] புகலிடம் தேடி வந்த மக்கள் தொழில்களைத் தொடங்க சலுகைகளும் நிதிஉதவியும் அளிக்கப்பட்டன.[28] சீரழிந்த கோயில்கள் சீரமைக்கப்பட்டன.[29]

தன்னுடைய அனுசரித்துப்போகும் கொள்கையின் விளைவாக தன் ஆட்சிக்கும் தொண்டைமண்டல மக்களுக்கும் ஏற்படக்கூடிய சீரழிவை வென்றுகொண்டான் தடுத்து நிறுத்தினான்.

படையெடுப்பின் ஆபத்தையும் அதனால் ஏற்பட்ட சீரழிவையும் கொடுமைகளையும் மக்கள் மறக்கவும், அவர்களது கவனத்தை திசைதிருப்பவும் விழாக்களை கொண்டாடினான். ஆட்சிப் பகுதி முழுவதும், அரசன் அனுமதிபெற்ற கூத்தாட்டக் குழுக்கள் தெருக்கூத்துகளை நடத்தி மக்களை மகிழ்வித்தனர் என்று அவனது 17வது ஆட்சி யாண்டுக் கல்வெட்டொன்று கூறுகிறது.[30]

## இராசநாராயண சம்புவரையன்

வென்று மண்கொண்டானுக்குப் பின் ஆட்சிப்பொறுப்பை ஏற்றவன், இராசநாராயண சம்புவரையன் ஆவன். 'சகல லோகச் சக்கரவர்த்தி; திரிபுவனச் சக்கரவர்த்தி' போன்ற ஆரவாரப் பட்டங்களை இவன் பூண்டிருந்தான். கி.பி 1338-39 லிருந்து 1351 வரை தன்னாட்சியும், 1351லிருந்து 1363 வரை விசயநகரப் பேரரசின் மேலாட்சியை ஏற்ற ஆட்சித் தலைவனாகவும் இவன் செயல்பட்டான். இன்றைய வடஆற்காடு, செங்கை-அண்ணா மாவட்டங்கள், தென் ஆற்காடு மாவட்ட திருக்கோயிலூர் வரையிலான பகுதிகள் இவன் ஆட்சிப்பரப்பில் அடங்கும். [31]

வென்று மண்கொண்டானுக்கும் இராசநாராயண சம்புவரையனுக்கும் உள்ள உறவு முறை குட்டியத்தில் கிடைத்துள்ள இராசநாராயணனின் 3-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் தெளிவு படுத்தப்பட்டுள்ளது. [32] அதில் சகல லோகச்சக்கரவர்த்தி பொன்னின் தம்பிரான் இராசநாராயணனின் அய்யாச்சியார் (தந்தை) வென்று மண்கொண்டான் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

தன் தந்தையான வென்று மண்கொண்டான் இறந்த பின், இறுதிக் கடன்களையாற்றிய இராசநாராயணன், தன் மாளிகையில் அதிகாரியாக இருந்த அகம்படிமுதலியார் ஒருவரிடம், தந்தையின் சாம்பலைக் கொடுத்து அதைப்புனித கங்கையில் கரைத்திட வழி செய்தான். தந்தைக்கான நீத்தார் கடனை, புனித கரையில் செய்ய வகை செய்தான். இந்தப் பணியை நிறைவேற்றி விட்டு வந்த அந்த அகம்படி முதலியார், அதன் நினைவாக 'எழும்போதன் கங்கையாடி மாதநாராயணன்' என்று பெயர் பெற்றான். கங்கைசென்று

திரும்பிய அந்த அகம்படி முதலியாருக்கு இராசநாராயணன், குட்டியம் கிராமத்தை, இராசநாராயணநல்லூர், என்று பெயர் மாற்றி வரியில்லா கங்காமண விருத்தியாகத் தானமளித்தான் என்ற விவரங்கள் குட்டியம் கல்வெட்டில் பொறிக்கப் பட்டுள்ளன.[33]

அப்படி சிறப்பிக்கப்பெற்ற அகம்படி முதலியார் வென்று மண்கொண்டானிடம் பற்று மிகக்கொண்டவர் எனவும், குட்டியம் கிராமத்தில் தன் தலைவன் நினைவாக அவன் பெயரில் ஏகாம்பரநாதர் ஆலயம் எடுப்பித்து அதற்கு தானங்கள் அளித்தான் எனவும் கல்வெட்டு கூறுகிறது.[34]

இராசநாராயணனது ஆட்சி ஓரளவு அமைதியான ஆட்சியாக அமைந்திருந்தது. அவனது ஆட்சி பற்றிய குறிப்புகளுடைய கல்வெட்டுகள் நூற்றுக்கும் அதிகமாகக் காணப்படுகின்றன.

இராசநாராயணனது 4ம் ஆட்சியாண்டு கல்வெட் டொன்றில் திருவோத்தூர் ஆலயத்திற்கு அவன் அளித்த மடப்புற நிலங்கள் பற்றிய விவரங்கள் குறிக்கப்பட்டுள்ளன.[35] அவனாட்சியில் விதிக்கப்பெற்றிருந்த பல்வேறு ஆயங்கள், வரிகள், கடமை, காணம் பற்றிய செய்திகளை அதில் காண்கிறோம்.

கல்வெட்டுக்களில் அவன் சகலலோகச் சக்கரவர்த்தி ஸ்ரீ ராசநாராயண சம்புவராயன் என்றும்,[36] சகலலோகச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ ராசநாராயண சம்புஉடையார்[37] என்றும் குறிக்கப்பட்டிருக்கிறான்.

6வது ஆட்சியாண்டைச் சார்ந்த கல்வெட்டொன்று சகல லோகச் சக்கரவர்த்தி ஸ்ரீ ராசநாராயண சம்புவராயன்

திருவோத்தூர் கைக்கோளர்களுக்குத் தறிக்கடமை செய்து வைத்த விவரங்களைக் கூறுகிறது[38].

அவனது ஆட்சியில் ஏற்பட்ட பெருவெள்ளம் பற்றிய செய்திகள் மருதூரில் உள்ள 6ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டிலும்[39], வெள்ள நிவாரணத்திற்கென மேற்கொண்ட திட்டங்கள் பற்றிய குறிப்புகள் திருவல்லம், குடிமல்லூர், கல்வை ஆகிய ஊர்களில் உள்ள 7-ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்களிலும் குறிக்கப்பட்டுள்ளன.

அவனது -ம் ஆட்சியாண்டில், திருஞான சம்பந்த நல்லூரான அத்திப்-பற்று நாவல்பாக்கம் சபையோர், திருவோத்தூர் கோயிலில் திருப்பாட்டு ஓதுவாருக்கு சம்புவராயர் வரியற்ற நிலங்கள் தானமாக அளித்தனர் என்ற செய்தி அக்கோயிலில் உள்ள கல்வெட்டில் இடம் பெற்றுள்ளது.[40]

இராச நாராயண சம்புவரையன் சைவனாக இருந்த போதும் சமயப் பொறையைக் கடைப்பிடித்தான். மாமல்லையில் உள்ள உலகளந்த பெருமாள் என்று பெயர் பெற்ற ஸ்தலசயனபெருமாள் கோயிலுக்கு நிவந்தங்கள் அளித்துள்ளான்.[41]

அவனது 12-வது ஆட்சியாண்டில் வைகைத் திருமலையில், பொன்னூர் மண்ணை பொன்னாண்டையின் மகளான நல்லாத்தாள் என்பவள, ஸ்ரீ விஹார நாயனார் பொன்னெயில்நாதர் எனப்படும அருகனுடைய படிமத்தை வைத்தாள்[42] என்ற செய்தியையும், பொன்னிநாதருக்கு வீரவீரஜினாலயம் என்ற பெயரால் ஒரு சமண ஆலயம் சம்பூவராயர் ஒருவரால் உருவாக்கப்பட்டு அதற்குப் பள்ளித்தான

மாக நிலங்கள் அளிக்கப்பட்டன.[43] என்ற விவரங்களையும் கல்வெட்டுக்கள் எடுத்துரைக்கின்றன.

இராசநாராயண சம்புவராயனின் ஆட்சியில் தொழில்களும் வணிகமும் பெருகின. கைவினையர்கள் ஆதரிக்கப்பட்டனர். சதராஸ் எனப்படும் சதுரங்கப்பட்டினம் சிறந்த வணிகத் தளமாக உருவானது. அந்தத் துறைமுக நகரம், இராசநாராயணப்பட்டிணம் என்று பெயர் மாற்றப்பட்டது.[44]

## இராசநாராயண சம்புவராயனும், மதுரை சுல்தானியமும்

தொண்டை மண்டலத்தில் படைவீட்டு ராச்சியத்தை இராச நாராயணசம்புவராயன் ஆட்சிசெய்த அதே காலத்தில் தான் மதுரையில் சுல்தானிய அரசு நிலவியது. அதன் வடக்கெல்லை சிதம்பரம்வரை பரவியிருந்தது.

மதுரையிலிருந்து தென்தமிழகத்தை ஆண்ட முஸ்லீம் அரசான மதுரை சுல்தானியத்திற்கும். இந்துவான இராச நாராயண சம்புவராயனின் வட தமிழக ஆட்சியான படை வீட்டு ராச்சியத்திற்கும் இடையே நிலவியிருக்கக்கூடிய உறவு முறை எத்தகையதாக இருந்திருக்கும் என்பது வரலாற்றில் அறிந்துகொள்ள முடியாத ஒரு புதிராக உள்ளது.

முஸ்லீம்களுடைய மதுரை சுல்தானிய அரசுக்கும், சம்புவரையருக்கும் இடையே மோதல் ஏதும் ஏற்பட்டதற்கான அறிகுறிகள் வரலாற்றில் இல்லை. இருபிரிவினரையும் இப்படி ஒருவரோடொருவர் எந்தக் கட்டத்திலும் மோதலைத் தவிர்த்தமைக்கு அடிப்படை காரணமாக அமைந்தது எது என்பதும் புரியாத புதிராகவேயுள்ளது.

வென்று மண்கொண்டான் காலத்திலேயே விசயநகரப் பேரரசு உருவானபோது அத்துடன் உறவுகொள்ளாது

ஒதுங்கி நின்ற ஒரே இந்து ஆட்சி சம்புவரையர் ஆட்சிதான் என்பதை வரலாறு சுட்டிக் காட்டுகிறது. இராச நாராயண சம்புவராயனும் இந்துப்பேரரசான விசயநகரப் பேரரசுடன் எந்த உறவும் கொண்டிருந்தான் என்பதற்கான சான்றேதும் இல்லை.

பக்கத்தேயுள்ள திருவண்ணாமலையைத் தன் தலைமை யிடமாகக்கொண்ட இந்து மன்னனான போசளமன்னன் மூன்றாம் வீரவல்லாளன் தமிழகத்திலிருந்து முஸ்லீம் அரசையும் படைகளையும் விரட்ட மேற்கொண்ட எந்த முயற்சியிலும் இராசநாராயணசம்புவராயன் பங்கு கொள்ளவில்லை என்பது வியப்புக்குரிய ஒன்றே.

இராசநாராயண சம்புவராயனுக்கும் மதுரை சுல்தானிய அரசர்களுக்கும் இடையே மறைமுகமான ஒப்பந்தம் ஏதேனும் இருந்திருக்கக் கூடும் என்ற ஐயத்தை இது எழுப்பு கிறது.

1341-ல் மதுரை சுல்தானாக இருந்த அலாவுதீன் உதௌஜி என்பவன், போசளமன்னன் மூன்றும் வல்லாளனின் திருவண்ணாமலை மீது படையெடுத்தபோது இடையே இருந்த படைவீட்டு ராச்சியத்தை அவன் கைப்பற்றவில்லை என்பதையும், அவன் அங்கு தடுத்து நிறுத்தப்படவில்லை என்பதையும், மாறாக எந்தவிதத் தடையுமின்றி அவன் திருவணணாமலை வரை செல்ல அனுமதிக்கப்பட்டான் என்பதையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

இந்து மன்னனான போசளனுடைய தலைமையிடமான திருவண்ணாமலை முற்றுகையிடப்பட்ட போதும், பக்கத்தில் உள்ள படைவீட்டு ராச்சிய ஆட்சியாளன் இராசநாராயண

சம்புவராயன், சகலலோகச்சக்கரவர்த்தி என்ற ஆடம்பர, ஆரவார விருது பூண்ட மற்றொரு இந்து ஆட்சித்தலைவன், வீரவல்லாளனுக்குத் துணையாக நிற்கவில்லை என்பதும் வேதனைக்குரியதே.

திருவண்ணாமலைப்போரில் மூன்றாம் வீரவல்லாளன் பெருவெற்றி பெற்றான். மதுரைப்படைகள் முறியடிக்கப் பட்டன. அலாவுதீன் உதௌஜி கொல்லப்பட்டான்.

திருவண்ணாமலை வெற்றிக்குப்பிறகு, தமிழ் மண்ணி லிருந்தே முஸ்லீம் படைகளை விரட்ட வீரவல்லாளன், அவர் களது பிடியில் இருந்த பழைய போசளத் தலைநகரான, திருச்சிக்கருகிலிருந்த கண்ணனூர்க்குப்பத்தை 1343-ல் முற்றுகையிட்டான் இந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க கண்ணனூர்க்குப்பம் போரிலும் வீரவல்லாளனுக்குத் துணை செல்லாது இராசநாராயணசம்புவரையன் ஒதுங்கியிருந்தான். ஆறு மாதம் நீடித்த முற்றுகைக்குப் பின் முஸ்லீம் படைகள் சரணடைய ஒப்புதல் அளித்தனர். மூன்றாம் வல்லாளன் அதை நம்பி போரை நிறுத்தியபோது வஞ்சகமாக மதுரை சுல்தான் கியாசுதீன் தம்கானி படையுடன்வந்து போசளனைத் தாக்கினான். சுல்தானின் மருமகன் நாசிருதீன், முதுமை வாய்ந்த போசளமன்னன் மூன்றாம் வல்லளானை சிறைப் பிடித்தான். உயிரோடு தோலுரித்துக்கொன்றான். தோல் உரிக்கப்பட்ட அம் மாவீரன் உடல் மதுரைக் கோட்டை வாயிலில் தொங்கவிடப்பட்டது' என்ற துயரமான செய்தி களை அதை நேரில்கண்ட வரலாற்று ஆசிரியன் இபின் பட்டுடா தன் நூலில் குறிப்பிட்டுள்ளான்.

வீரவல்லாளனுக்குத் துணையாகச் செல்லாது இராச நாராயணன் தனித்து நின்றது; தன்னை மட்டுமே காத்துக்

கொள்வது என்றத் தன்னலக்கொள்கை அடிப்படையில்தான், என்று வரலாற்று ஆசிரியர்கள் கருதுகின்றனர். சம்புவரையர் வரலாற்றிலேயே அழியாத கறைபடிந்த நிகழ்ச்சி இது.

சம்புவரையர்களுடைய வீழ்ச்சிக்கும் இதுவே காரணமாய் இருந்தது. கண்ணனூர்க்குப்பம் போருக்குப் பிறகுதான் கி.பி. 1351-ல் விசயநகரப் பேரரசுப் படைகள் தமிழகத்தின் மீது முதன்முதல் படையெடுக்கின்றன. குமாரகம்பணனால் தோற்கடிக்கப்பட்ட இராசநாராயணசம்புவராயன் தனியாட்சி நடத்தும் உரிமையிழந்து விசயநகரப் பேரரசுக்குட்பட்ட ஆட்சித் தலைவனாக மாற்றப்பட்டான்.

இராசநாராயண சம்புவராயனின் 18-வது ஆட்சியாண்டு (1357) கல்வெட்டொன்றில் வீரகம்பநாராயணரான வீர வல்லாளதேவர் பற்றி வரும் குறிப்புக்கள் இதை உறுதி செய்கின்றன.[45] தமிழகத்தில் விசயநகரப் பேரரசின் பிரதிநிதியாக படைத்தலைவன் சாவண்ணன் அமர்த்தப்பட்டான் என்பது வரலாறு கூறும் உண்மை.

இராசநாராயண சம்புவராயனின் 20வது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று கீழ்மின்னலில் உள்ளது.[46] அதன் அடிப்படையில் இராசநாராயண சம்புவரையனின் ஆட்சி கி.பி. 1359 வரை நீடித்திருக்க வேண்டுமென ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.[47]

குமாரகம்பணனின் படையெடுப்பில் சம்புவராயன் தோற்ற செய்தி கி.பி. 1363ம் ஆண்டு நாளிட்ட மடம் கல்வெட்டில்[48] குறிப்பிடப்பட்டிருப்பதால், இராசநாராயண ஆட்சி கி.பி. 1363 வரை நீடித்திருக்கக்கூடும் என்று கருதும் ஆராய்ச்சியாளரும் உள்ளனர். தொண்டை மண்டலத்தின்

சில இடங்களில் அவனுடைய 24வது 26வது ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்கள் ஒன்றிரண்டு கிடைத்திருப்பதை வைத்து அவனது ஆட்சிக்காலம் 1365 வரை நீடித்திருக்கலாம் என்று கருதுவோரும் உள்ளனர்.[49] ஆனால் மடம் கல்வெட்டில்[50] அழிக்கப்பட்ட சம்புவராயனுடைய பெயர் வென்று மண் கொண்டான் என்று தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருப்பதால் கி.பி 1363க்கு முன்பு இராசநாராயணனின் ஆட்சி முடிவுற்று இருக்கவேண்டும் என்பது பெறப்படும்.

## இரண்டாம் வென்று மண்கொண்ட சம்புவரையன்

இராசநாராயண சம்புவரையனுக்குப் பின் அவனது மகனான வென்று மண்கொண்டான் என்பவன் ஆட்சித் தலைவனானான். இவன் வரலாற்றாசிரியர்களால் இரண்டாம் வென்று மண்கொண்டான் என்று அழைக்கப்படுகிறான். இவனது ஆட்சி மிகக் குறுகிய காலமே நீடித்தது. விசயநகரப் பேரரசின் படைகள் படைவீட்டு ராச்சியத்தைக் கைப்பற்றின. சம்புவரையர் ஆட்சி வீழ்ச்சியுற்றது. விசய நகரப் பேரரசின் ஏழு இராச்சியங்களில் ஒன்றாக இராசகம்பீர இராச்சியம் மாற்றப்பட்டது.

1. South India and her Muhammadan invaders. P.12
2. கன்னி 102, வேற்சம்பன் வாழ் மல்லிநாதன்
   கன்னி 146. திருமல்லிநாதன் கன்னி 320 சம்பன்
3. Ep. In. Vol. 12 A.
4. Ibid Vol. 12 B.
5. பிற்காலச் சோழர் வரலாறு, 1775 பக் 446
6. கன்னி 61 சம்பு குலத்தோருவன் சாத்துகைக்காம் என்றமைத்த செம்பொன் மணிமகுடம்
7. கன்னி 102 வேற்சம்பன் வாழ் மல்லிநாதன் கொடுத்த திருத்தேர்

8. கன்னி 151 சம்பு குலப்பெருமாள் வைத்த துலாபார மண்டபம்
9. கன்னி 320 சம்பன் படைத்த துலா மண்டபம்
10 S K. Aiyangar, SouthIndia and her Mohammadan invaders, P. 14
11. Ibid
12. க. ஆ. அ 24/1887
13 க ஆ அ. 162/1939-40
14 South India and her Muhammadan invaders-P-14
15. Elliot and Dousan, History of India. Vol III. P 204
16. South India and her Muhammadan invaders'P-13
17 க. ஆ. அ. 33 1933
18. The Cholas, 1974, P-14.
19. N. Venkataramanaiya, Early Muslim Expansion in South India PP 202-205.
20. க. ஆ. அ. எண் 206 1929-30
21. K. A. Nilakanta Sastri, The Pandyankingdam, 1969, P 213
22. S. Thiruvenkatachari (ed), Madhura Vijayam 1957, P 15
23. க. ஆ. அ. எண் 434/1936, தெ, இ. க. மடலம் 3
24. க ஆ. அ. எண் 203/1912
25. நத்தம் கல்வெட்டு, க. ஆ. அ. எண் 276/1912
26. க. ஆ. அ. எண் 35 1933-34
27. மேலது
28. திருக்கச்சியூர் கல்வெட்டு, க. ஆ. அ. எண் 47/1932
29. க. ஆ. அ. எண் 45/1900; 453/1903; 42, 48/1921 (காஞ்சிபுரம்)
30. க. ஆ. அ. எண் 42/1921
31. க. ஆ. அ. எண் 81/1935-36
32. க. ஆ. அ. எண் 33/1933-34

33. மேலது
34. மேலது
35. தெ. இ. க. மடலம 8 எண் 109 க. ஆ. அ எண் 99 1900
36. க. ஆ. அ. எண் 101/939-40; 96/1900; 114/1939-40
37. க. ஆ. அ. எண் 113/1939-40
38. க. ஆ. அ. எண் 111/1939-40
39. க. ஆ. அ. எண் 410/1912;230/1901
40. க. ஆ. அ. எண் 96/1900
41. க. ஆ. அ. எண் 113/1932-33
42. தெ. இ. க. மடலம் 1, எண் 70, பக்கம் 102
43. க. ஆ. அ. எண் 58/1900
44. க. ஆ. அ. எண் 103/1932-33
45. க. ஆ. அ. எண் 120/1939-40
46. க. ஆ. அ. எண் 36 1933-34
47. S. Thiruvenkatachari, (ed) Madhura Vijayam (1957) P-15
48. க. ஆ. அ. எண் 267/1919
49. தி. வை. சதாசிவ பண்டாரத்தார், சம்புவராய மன்னர், தமிழ்ப்பொழில், துணர் 2 பக்கம் 150
50. க. ஆ. அ. எண் 267/1919

# 6. சம்புவரையர் வீழ்ச்சி

விசயநகரப் பேரரசன் முதலாம் புக்கனின் மகனான குமார கம்பண்ணன் என்பவன், கி. பி. 14ம் நூற்றாண்டில் தமிழகத்தின் மீது படையெடுத்து, மதுரைவரைச் சென்று, அங்கு அரசோச்சிய முஸ்லிம் சுல்தானிய அரசை வென்று, மதுரையை மீட்ட வரலாற்றை, காவிய வடிவில் அவனுடைய அரசியான கங்காதேவி என்பவள் 'மதுரா விஜயம்' என்ற வடமொழி நூலில் விரிவாக வரைந்துள்ளாள்.

'மதுரா விஜயம்' காவியத்தில் குமாரகம்பண்ணன், முதலில் காஞ்சியைத் தலைநகராகக்கொண்டுதொண்டைமண்டலத்தை ஆண்ட சம்புவராயனோடு, போரிட்டு, அவனைத் தோற்கடித்து கொன்று, அவனது ஆட்சியைக் கைப்பற்றினான் என்று கூறப்பட்டுள்ளது.

வடஆற்காடு மாவட்டம் மடம் பகுதியில் உள்ள கல்வெட்டொன்று, குமாரகம்பண்ணன், வென்று மண் கொண்ட சம்புவராயனை, வென்று அவனுடைய இராசகம்பீரமலையைக் கைப்பற்றினான், என்று குறிப்பிடுகிறது.

குமார கம்பணனால் வெற்றிகொள்ளப்பட்ட சம்பு வராயன், கி பி 1322 முதல் 1339 வரை ஆட்சி செய்த முதலாம் வென்று மண்கொண்டானாக இருக்கலாம் எனச் சில ஆராய்ச்சியாளர் தவறாகக் கணித்துள்ளனர்.[2]

இதைப்பற்றி விரிவாக ஆராய்ச்சி மேற்கொண்ட கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் ஒரு கட்டத்தில் கி. பி. 1322-23ம் ஆண்டில் ஆட்சியைத் தொடங்கிய சகலலோகச் சக்கரவர்த்தி வென்றுமண்கொண்டசம்புவராயன், அவனுக்குப்

பின் 1337-38ல் ஆட்சிப் பொறுப்பை ஏற்று 1356-57ம் ஆண்டு வரை ஆட்சி நடத்திய சகலலோகச் சக்கரவர்த்தி இராச நாராயண சம்புவராயன், ஆகிய இருவருள் இராசநாராயண சம்புவராயனே, குமாரகம்பணால் தோற்கடிக்கப்பட்டவன்'' என்று கூறுகிறார்.

அதே ஆசிரியர், அடுத்த கட்டத்தில் தாம் முன்புசொன்ன கருத்தையே மறுத்து ''சகம் 1245-ல் (1322-23) ஆட்சியைத் தொடங்கிய சகலலோகச் சக்கரவர்த்தி வென்று மண்கொண்ட சம்புவராயனே குமாரகம்பணால் தோற்கடிக்கப்பட்ட தலைவனாக இருக்கக் கூடும். இந்தப்போர், அவனுக்குப்பின் ஆட்சியை ஏற்ற சகலலோகச்சக்கரவர்த்தி இராசநாராயண சம்புவராயன் ஆட்சியைத் தொடங்கிய கி பி 1347-ஆண்டு அளவில் நிகழ்ந்திருக்கக் கூடும்'' என்று கூறியுள்ளார்.

'வென்று மண்கொண்டானைக், குமாரகம்பணன் கி பி 1347-ல் வென்றான்' என்ற தம்கணிப்பிற்கான ஆதாரம் எதையும் கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் குறிப்பிட வில்லை.

இது ஒரு தவறான கணிப்பு என, பிற ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். ஏனெனில் தமிழகத்தில் குமாரகம்பணனின் முதல் கல்வெட்டு ஆவூர் பகுதியில் உள்ளது.[3] அதில் குறிப்பிடப்பட்டுள்ள ஆண்டு சகம் 1274, கி.பி 1352 தான்.

அதுவுமன்றி, முதலாம் வென்று மண்கொண்டான் நிறைவாழ்வு வாழ்ந்து அமைதியான முறையில் இயற்கை எய்தினான் என்பதையும், அவனுடையமகன் இராச நாராயண சம்புவராயன் தன்தந்தையின் சாம்பலைக் கங்கையில் கரைக்க அனுப்பினான் என்பதையும் குட்டியம் கல்வெட்டு விரிவாக எடுத்துரைக்கிறது.[4]

எனவே, குமாரகம்பணனால் தோற்கடிக்கப்பட்ட சம்புவ ராயன், முதலாம் வென்று மண்கொண்டானாக இருக்க முடியாது என்பது திண்ணம்.

அடுத்து, இராசநாராயண சம்புவரையனின் ஆட்சி கி.பி. 1359, அல்லது 1365 வரையிலும் நீடித்தது என்பதற்கு அவனது 20, 26ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்கள் சான்றாக அமைந்துள்ளன.[5] ஆனால் மதுரா விஜயம் காவியத்தில் குமார கம்பணனோடு போரிட்ட சம்புவராயன் தோற்கடிக்கப் பட்டுக் கொல்லப்பட்டான் என்று கூறப்பட்டுள்ளது. இந்தப் போர் கி. பி. 1351ம் ஆண்டளவில் நிகழ்ந்திருக்கக்கூடும் என்ற கருத்தை ஏற்றால், அந்தப்போரில் கொல்லப்பட்ட சம்புவராயன் கி. பி. 1359, அல்லது 1365 வரை ஆட்சி நடத்திய இராசநாராயணனாக இருக்க முடியாது என்பது உறுதி.

மேலும், குமாரகம்பணின் இந்தப் படையெடுப்பில் துணை நின்ற அவனது படைத்தலைவர்களுள் ஒருவனான சாளுவமங்கு என்பவன் 'சம்புவராய ஸ்தாபனாச்சார்யன்' என்ற பட்டத்தைப் பெற்றுள்ளான்.[6] போரில் சம்புவராயன் கொல்லப்பட்டிருப்பின் 'சம்புவராயனைப் பதவியில் அமர்த் தியவன்' என்ற பட்டத்துக்கே பொருளிருக்க முடியாதே.

அதே நேரத்தில், கி. பி. 1359, அல்லது 1365 வரை ஆட்சிசெய்த இராசநாராயணனின் 11வது 12வது ஆட்சி- யாண்டுகளில், அவனது ஆட்சிப் பகுதியில் விசயநகரப்பேரரசர் களின் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன,[7] என்ற உண்மையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

'மதுரா விஜயம்' காவியத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ள திரு. திருவேங்கடாச்சாரி அவர்கள் இந்தக்

குழப்பமான சூழ்நிலையை விரிவாக ஆராய்ந்து சில விளக்கங்களை அளித்துள்ளார்.[8]

"குமாரகம்பணன், இருமுறைத் தமிழகத்தின் மீது படையெடுத்து வந்திருக்க வேண்டும்.

கி.பி. 1351-ல் மேற்கொள்ளப்பட்ட படையெடுப்பு, குமாரகம்பணன் முல்பாகல் பகுதியின் ஆளுநராக இருந்த போது நிகழ்ந்திருக்க வேண்டும். இதைக் குமாரகம்பணின் 1352-ம் ஆண்டுத் திருவண்ணாமலைக் கல்வெட்டு உறுதிப் படுத்துகிறது.[9]

இந்த முதல் படையெடுப்பில் குமாரகம்பணனுக்குத் துணையாக வந்தவன் உதயகிரிப்பட்டினத்து ஆளுநரான வீரசாவண்ணன் ஆகும். வீரசாவண்ணனின் படைத்தலைவனான சாளுவமங்கு, சம்புவராயனைப் போரில் தோற்கடித்தான். போரில் தோற்ற சம்புவராயன், விசயநகரப்பேரரசின் மேலாட்சியை ஏற்க ஒப்புதல் அளித்திருக்கக்கூடும். அதனால் அவன் மீண்டும் ஆட்சிப் பொறுப்பில் அமர்த்தப்பட்டான். இதையொட்டியே, சாளுவமங்குவும், வீரசாவண்ணனும், 'சம்புவராயஸ்தாபனாச்சார்யன்' என்ற சிறப்பைப் பெற்று இருக்கவேண்டும். 'சாவண்ண மகாராஜா' வின் வில்லியனூர்க் கல்வெட்டுக்களில் இக்குறிப்புகள் காணப்படுகின்றன.[10]

சம்புவரைருக்கு எதிரான இந்த முதல் படையெடுப்பு கி.பி. 1352-க்கு முன் நிகழ்ந்திருக்கவேண்டும் என்பது தஞ்சை மாவட்ட செந்தலையில் உள்ள வீரசாவண்ணனின் 1352-53ம் ஆண்டுக் கல்வெட்டுக் குறிப்புகளால் தெரிகிறது.

இந்த முதல் படையெடுப்பின் வெற்றிக்குப்பின் சிறிது காலம் திருவண்ணாமலையில் தங்கியிருந்த குமாரகம்பணன்,

பிறகு தன்னுடைய முல்பாகல் ராச்சியத்திற்குத்திரும்பியிருக்க வேண்டும். அதற்குமுன், வெற்றி கொள்ளப்பட்ட தமிழ் நாட்டுப் பகுதியின் விசயநகரப் பேரரசின் பிரதிநிதியாக, வீர சாவண்ணனை அமர்த்திவிட்டுச் சென்றிருக்கக்கூடும். கி.பி. 1352-ம் ஆண்டு திருவண்ணாமலைக் கல்வெட்டிற்குப்பின் பல ஆண்டுகள் குமாரகம்பனின் கல்வெட்டுக்கள் தமிழ் நாட்டில் காணப்படவில்லை என்பதும், அந்த இடைக்காலத்தில் வீரசாவண்ணனின் கல்வெட்டுக்கள் தமிழ்நாட்டில் காணப் படுவதும் இதை உறுதிப்படுத்துகிறது. வீரசாவண்ணனின் கல்வெட்டுக்கள் ஏராளமானவை தமிழகத்தில் கண்டெடுக்கப் பட்டுள்ளன.[11] இவற்றுள் காலத்தால் முந்தியது முதல் கல்வெட்டு, செங்கை-அண்ணா மாவட்டத்தின் வடபகுதியில் உள்ள பொன்னேரியில் காணப்படுகிறது.[12] அவன் காலத்துக் கடைசிகாலக் கல்வெட்டுக்கள் வில்லியநல்லூரில் உள்ளன.[13]

விசயநகர இளவரசன் குமாரகம்பணன், சம்புவராயனை வென்று, விசயநகரப் பேரரசுக்குக் கட்டுப்பட்டவனாக மாற்றி, மீண்டும் அவன் ஆட்சிப் பொறுப்பில் அமர்த்தினான் என்பதைக் கல்வெட்டு ஆதாரங்களும் இலக்கியக் குறிப்புகளும் உறுதி செய்கின்றன.

ஜய்மினிபாரதம் என்ற நூலின் முன்னுரையில் உள்ள வரிகள் சாளுவமங்குவின் சிறப்பினைப் போற்றுபவை. அதில் அவன் 'சாம்புவராயனை அவனுடைய ஆட்சிப் பொறுப்பில் மீண்டும் அமர்த்தி 'சாம்பரைய ஸ்தாபானாச் சார்யன்' என்ற பட்டத்தைப் பெற்றான் என்று கூறப்பட்டு உள்ளது.

சாளுவமரபைப் போற்றும் மற்றொரு நூலான 'சாளுவாப் யுதயம்' என்ற நூலில் 'சாளுவமங்கு போர்க்களத்தில்

சம்புவராயனை வென்று பிறகு அவனாட்சிப் பொறுப்பில் மீண்டும் வீற்றிருக்கச் செய்தான்' என்று குறிக்கப்பட்டுள்ளது.

## விசயநகரப் பேரரசில் சம்புவரையர்

விசயநகரப் பேரரசு, அன்னியரான வடதிசை முஸ்லீம் களின் ஆதிக்கத்துக்கும் ஆக்கிரமிப்புக்கும் எதிராக எழுந்த தென்னகத்து இந்து எழுச்சியின் சின்னமாக உருவான ஒன்று என்பது வரலாற்று உண்மை. விசயநகரப் பேரரசு தென்னகத்தின் ஆட்சி செய்தபோது, தமிழகத்தில் இருந்த மற்றொரு இந்து ஆட்சி சம்புவரையருடைய படைவீட்டு ராச்சிய ஆட்சி. பொது எதிரியான அன்னிய முஸ்லீம்களைத் தென்னகத்தை விட்டு விரட்டும் பணியில் இந்த இரண்டு இந்து ஆட்சியினரும் இணைந்து போராட வேண்டிய வரலாற்றுக் கட்டத்தில் இவைகளுக்கிடையே முரண்பாடு ஏற்பட்டது ஏன் என்பதைப்பற்றி வரலாற்று ஆராய்ச்சியாளர் பல்வேறு கருத்துக்களைக் கொண்டுள்ளனர்.

வடதிசை முஸ்லீம் ஆதிக்கத்திற்கெதிராகத் தென்னக இந்து ஆட்சியாளர்கள் ஒருங்கிணைந்து செயல்பட்டு, அதன் விளைவாக விசயநகரப் பேரரசு உருவானபோது, அந்த எழுச்சியோடுத் தம்மை இணைத்துக் கொள்ளாமல் ஒதுங்கி யிருந்த ஒரே இந்து ஆட்சித்தலைவர் சம்புவரையர் தான்.

மதுரையில் முஸ்லீம் சுல்தானிய அரசு அமைக்கப்பட்ட போது, தமிழகத்தின் பெரும்பகுதி அதனால் பெரும் அல்லலுற்றபோது, எந்தவித பாதிப்புக்கும் ஆளாகாத ஒரே பகுதி சம்புவரையர் ஆட்சிக்குட்பட்ட பகுதிதான். இதுவே மதுரை சுல்தானிய அரசுக்கும், சம்புவரையருக்கும் இடையே மறைமுகமான உடன்பாடு இருந்திருக்கக்கூடும் என்ற ஐயப் பாட்டை, பிற இந்து அரசர்களிடம் ஏற்படுத்தியிருக்கக்கூடும்.

இந்து மன்னனான போசளன் வீரவல்லாளனுடைய தலைநகரமான திருவண்ணாமலையை மதுரை சுல்தானியப் படைகள் முற்றுகையிட்டபோது, இராசநாராயணன் அவனுக்குத் துணையாக நில்லாது ஒதுங்கியிருந்ததும், கண்ணனூர்க் குப்பம் போரில் வீவரல்லாளன் வஞ்சமாக மதுரை சுல்தானால் சிறைபிடிக்கப்பட்டபோதும், அவன் உயிருடன் தோலுரித்துக் கொல்லப்பட்டபோதும், இராசநாராயணன் தன்னை மட்டுமே காத்துக்கொள்ளப் பின்பற்றிய 'தலையிடாமைக் கொள்கை'யும், சுல்தானிய அரசை அனுசரித்துப்போகும் கொள்கையும், விசயநகரப்பேரரசை, அவனுக்கு எதிராகப் படையெடுக்கத் தூண்டியிருக்கக்கூடும்.

இராசநாராயணனுடைய ஆட்சிப்பகுதியைக் கைப்பற்ற வேண்டும், அதை விசயநகரப் பேரரசோடு இணைக்க வேண்டும் என்ற ஆதிக்க எண்ணத்தோடு குமாரகம்பணன் தன்னுடைய முதல் படையெடுப்பை மேற்கொண்டதாகத் தெரியவில்லை மாறாக, இராசநாரயணனைத் தண்டிக்கும் நோக்கத்நோடு மேற்கொள்ளப்பட்ட ஒரு படையெடுப்பாகவே அது தோற்றமளிக்கிறது.

சம்புவரையரைத் தண்டிக்க வேண்டும் அவரை விசயநகரப் பேரரசின் மேலாட்சியை ஏற்கச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு படையெடுத்து வந்த குமாரகம்பணன் அதில் வெற்றி பெற்றான். இராசநாராயணனைத் தோற்கடித்தான், அவனை விசயநகரப் பேரரசின் மேலாட்சியை ஏற்க வைத்தான், மீண்டும் அவனையே ஆட்சித் தலைவனாக்கினான். 'சம்புவராய ஸ்தாபனாசார்யன்' என்று சாளுவமங்கும், வீரசாவண்ணனும் மேற்கொண்ட பட்டங்கள் அதை உறுதி செய்கின்றன.

கி. பி. 1352க்குப் பின் சம்புவரையர் தன்னாட்சி இழந்து விசயநகரப் பேரரசின் மேலாட்சியை ஏற்ற ஆட்சித்தலைவர்களாக படைவீட்டு இராச்சியத்தை ஆட்சி செய்தனர். விசய நகரப் பேரரசின் பிரதிநிதியாக சாவண்ணன் தமிழகத்தில் ஆட்சி செய்தான். கி. பி. 1354-55ம் ஆண்டுக்குரிய திருவொற்றியூர் கல்வெட்டொன்றில்[44] அந்தப் பகுதியின் காவல் அதிகாரிகளாக இருந்த 48 அகம்படியர்கள் தங்கள் பணியைச் செய்யத் தவறினர் என்றும், அதனால் அங்குக் கொள்ளைகளும் குழப்பங்களும் மிகுந்தன என்றும், வீரசாவண்ணன், கடமையைச் செய்யத் தவறிய அந்த 48 அகம்படியர்களுக்குத் தண்டனை அளித்தான், என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இது தமிழகத்தின் ஆட்சி, சாவண்ணனின் பொறுப்பில்தான் இருந்தது என்பதை எடுத்துக்காட்டுகிறது.

திருவோத்தூரில் உள்ள இராசநாராயணனது 18ம் ஆட்சியாண்டுக்குரிய முற்றுப்பெறாத கல்வெட்டொன்றில்,[65] அக்கோயிலில் வீரகம்பநாயனாரான வீரவல்லாள தேவர் எழுந்தருளிவித்த அண்ணாமலைநாயனார், பற்றிய குறிப்புக்கள் இடம் பெற்றுள்ளன. இதுவும், இராசநாராயணனுடைய ஆட்சியின் பிற்பகுதியில் அவன் விசயநகரப்பேரரசின் மேலாட்சியை ஏற்ற ஆட்சித் தலைவனாகவே விளங்கினான் என்ற கருத்தை வலியுறுத்துவதாக அமைந்துள்ளது.

## குமாரகம்பணனின் படையெடுப்பும் சம்புவரையர் வீழ்ச்சியும்

இளவரசி கங்காதேவியின் வடமொழிக் காவியமான 'மதுரா விஜயத்தில்' விவரிக்கப்படும் குமாரகம்பணனின் தமிழகப் படையெடுப்பும், அவன் சம்புவரையனை வீழ்த்திக் காஞ்சியைக் கைப்பற்றிய நிகழ்ச்சியும், அவன் மேற்கொண்ட

இரண்டாவது தமிழகப் படையெடுப்பின்போது நிகழ்ந் தவைகளாக இருக்கலாம்.

சகம் 1287, கி. பி. 1365-ஆம் ஆண்டு கல்வெட் டொன்றில் குமாரகம்பணன் இராசகம்பீர ராச்சியத்தைக் கைப்பற்றிய செய்தி குறிப்பிடப்படுகிறது.[16]

சம்புவரையர் மீது மேற்கொள்ளப்பட்ட இந்த இரண்டாவது விசயநகரப் பேரரசின் படையெடுப்புக்குக் காரணமாக அமைந்தவை எவை என்பதைப்பற்றிக் கல்வெட்டுக் களிலோ அன்றி இலக்கியங்களிலோ குறிப்புக்கள் ஏதுமில்லை.

தன் பேரரசுக்கு எதிராக, மதுரை சுல்தானிய அரசுக்கும் சம்புவரையருக்கும் இடையே கூட்டணி உருவாகலாம் என்ற அச்சம், விசயநகரப் பேரரசுக்கு ஏற்பட்டிருக்கக் கூடும்.

முதல் படையெடுப்புக்குப் பிறகு, தொண்டை மண்டலத்தில் உருவான விசயநகரப் பேரரசின் மேலாட்சி யிலிருந்து விடுபட சம்புவரையர் முயன்றிருக்கக்கூடும். சாவண்ணனின் ஆட்சிக்கெதிராக நாட்டில் குழப்பங்களை உருவாக்கியிருக்கக்கூடும்.

கலவையில் உள்ள கல்வெட்டொன்றில்[17] சாவண்ணனின் ஆட்சியின்போது ஏற்பட்ட குழப்பத்தில், திருக்காரீஸ்வரர் ஆலயத்தில் இருந்த நாயன்மார்களுடைய படிமங்கள் சிதைக்கப்பட்டன என்றும், பிறகு 1367ல் இவை மீண்டும் குமாரகம்பணனால் சீர் செய்யப்பட்டன, என்று குறிப்பிடப் பட்டுள்ளது இதை உறுதிப்படுத்துகிறது.

கலகத்தையடக்கி மீண்டும் அங்கே விசயநகரப் பேரரசின் ஆட்சியை நிலைக்கச் செய்ய இப்படையெடுப்பு மேற்கொள்ளப்பட்டிருக்கக்கூடும்.

சம்புவரையன் விசயநகரப் பேரரசின் மேலாட்சியிலிருந்து விடுபடவும், முன்னர் தமக்கேற்பட்ட தோல்விக்குப் பழி வாங்கவும், விசயநகரப்பேரரசின் மீது போர்த்தொடுக்க தனித்தோ, மதுரை சுல்தானியத்துடன் இணைந்தோ திட்ட மிட்டிருக்கக்கூடும். இதை சாவண்ணன் மூலம் அறிந்த குமாரகம்பணன், இனி சம்புவரையரைத் தனித்தாள விடுவ தில்லை என்ற முடிவோடு படையெடுத்து வந்திருக்கக்கூடும்.

மதுரையில் உள்ள முஸ்லீம் அரசுக்கெதிராகப் படை நடத்திச்செல்லும்படி தன்மகன் குமாரகம்பணனை வழியனுப்பி வைக்கும் விசயநகரப்பேரரசன் முதலாம் புக்கன் 'நமக்கெதி ராகப்போர் தொடுக்கப் படை திரட்டிவரும் சம்பன் மீது (சம்புவரையன்) படையெடுத்து அவனுடைய துண்டிரத்'தை (தொண்டை மண்டலத்தை)க் கைப்பற்று'' என்று அறிவுரை கூறினான்'' என மதுரா விஜயம் காவியத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது[18] இக்கருத்தை வலியுறுத்துகிறது.

அல்லது, மதுரை சுல்தானிய முஸ்லீம் அரசை அழிக்க, முதற்கட்டமாகத் தமிழகத்தில் விசயநகர அரசு நிலைபெறுவது தேவையான ஒன்று என்று முடிவெடுத்திருக்கக்கூடும். சம்புவராயனை அழித்துக் காஞ்சியைக் கைப்பற்றி, தன் ஆட்சியை அமைத்த 10 ஆண்டுகளுக்குப் பின்னரே, கி.பி. 1371-ல் தான் குமாரகம்பணன் மதுரை சுல்தானிய அரசின் மீது படையெடுத்தான் என்பதை எண்ணும்போது இக்கருத்து வலிமை பெறுகிறது.

மேலும் மதுராவிஜயத்தில் பேரரசன் முதலாம் புக்கன், தன் மகன் குமாரகம்பணனிடம் ''தொண்டை மண்டலத்தை வென்று காஞ்சியைக் கைப்பற்றி, அம்மக்கள் மனநிறைவு பெறும் வகையில் ஆட்சியை நடத்து'' என்று அறிவுரை

கூறியதாக வரும் வரிகள்,[19] இது ஒரு திட்டமிட்ட படையெடுப்பு என்ற கருத்தை வலியுறுத்துவனவாக அமைந்துள்ளன.

இப்படையெடுப்பில் சம்புவராயன் தோற்ற செய்தி கி.பி. 1363ம் ஆண்டு நாளிட்ட மடம் கல்வெட்டில்[20] குறிப்பிடப்பட்டிருப்பதால், கி.பி. 1363க்கு முன்பு இது நிகழ்ந்திருக்கக்கூடும். இராசநாராயணனின் ஆட்சி கி.பி. 1365 வரை நீடித்தது என்று கருதும் ஆராய்ச்சியாளர்கள் இப்படையெடுப்பு இராசநாராயணனின் காலத்தில் நிகழ்ந்தது என்றும் போரில் முறியடிக்கப்பட்ட சம்புவராயனை குமாரகம்பணன் மீண்டும் ஆட்சியில் அமர்த்தினான் என்றும், அவனுடைய துணையோடு மதுரை மீது படையெடுத்தான் என்றும் கூறுகின்றனர். இப்போரில் சம்புவராயன் கொல்லப்பட்டான் என்று மதுராவிஜயம் தெளிவுறுத்துவதாலும், இவ்வெற்றிக்குப் பின் 10 ஆண்டுகள் குமாரகம்பணன் காஞ்சியை ஆண்ட பின்னரே மதுரைமீது படையெடுத்துச் சென்றான் என்பதாலும், இச்சம்புவராயன் இராசநாராயணனாக இருக்க முடியாது என்பது புலனாகிறது.

சகம் 1285ம் ஆண்டை (கி,பி. 1363)ச் சார்ந்த மடம் கல்வெட்டில் குமாரகம்பணனால் தோற்கடிக்கப்பட்ட அச்சம்புவராயன் பெயர், வென்று மண்கொண்டான் என்று குறிப்பிடப் பட்டுள்ளது 'கண்டர்கூலி மாரயநாயகன் வென்று மண் கொண்டானை அழித்தான்' என்று அதில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதில் குறிப்பிடப்படும் சம்புவராயன், இராசநாராயணனுக்குப்பின் ஆட்சித்தலைவனாக விளங்கிய அவன் மகன் இரண்டாம் வென்று மண்கொண்டானாக இருக்கக்கூடும் என்பது ஆராய்ச்சியாளர் கருத்து.

இராசநாராயணனுக்குப் பின் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற இரண்டாம் வென்று மண்கொண்டான், விசயநகரப் பேரரசுக் கெதிராகச் செயல்பட்டிருக்க வேண்டும். அதைத் தடுக்கக் குமாரகம்பணன் படையெடுத்து வந்திருக்கக்கூடும்.

இந்தப் படையெடுப்பின் பலகட்டங்களையும், குமார கம்பணனின் உடனிருந்த அவன் அரசி கங்காதேவி தான் இயற்றிய மதுரா விஜயம் காவியத்தில் தொகுத்து வரைந்-துள்ளாள்.

தன்படையின் முன்னணியில் படைத்தலைவன் மாரய நாயகனை அனுப்பிவிட்டுக், குமாரகம்பணன் விசயநகரத்தை விட்டுப் புறப்பட்டான். முல்பாகல் (முல்வாய்) அல்லது கந்தகானனா பகுதியை அடைந்தான். அங்குப் பலநாட்கள் சம்புவராயனுக்கு எதிரான போர் நடவடிக்கைகளில் ஈடுபட்டான்.[21]

குமாரகம்பணனின் படைகள் முதலில் விரிஞ்சிபுரத்தைக் கைப்பற்றுகின்றன. அதற்குப்பின் படைவீடு முற்றுகையிடப் பட்டது.[22] சம்புவராயனின் படைகள் தோற்கடிக்கப்பட்டன. பிறகு குமாரகம்பணனின் படைகள்காஞ்சி மாநகர் நோக்கி முன்னேறின. விசயநகரப் பேரரசுப் படைகளுக்கும் த்ரமிலர் (தமிழர்) படைகளுக்கும் இடையே கடுமையான போர் நடந்தது தமிழர்படை தோற்கடிக்கப் பட்டது. காஞ்சி மாநகர் கைப்பற்றப்பட்டது. சம்புவராயன் அங்கிருந்து தப்பித் தன்னுடையக் கோட்டை நகரான படைவீட்டை அடைந்தான்.[23]

காஞ்சி மாநகரில் சில காலம் ஓய்வெடுத்த குமார கம்பணன் இறுதிப்போருக்குத் தயாரானான். சம்புவரையனின் இராசகம்பீரன் மலைக்கோட்டை முற்றுகையிடப்பட்டது.

சம்புவரையனின் படை முழுதும், 'யாரும் அணுக முடியாத அந்தமலைக்கோட்டையைக்' காக்கப் போராடின.[24]

'அழியா அரண் உடைத்து' என்ற பெருமைக்குரிய அந்தக் கோட்டையை, விசயநகரப் படைத்தலைவன் மாரய நாயகன் கைப்பற்றி 'அழியா அரண் அழித்த' என்ற சிறப்புப் பட்டத்தைப் பெற்றான். அந்த வெற்றியின் சின்னமாகப் பெரியதொரு கோபுரம் எழுப்பி, அதற்குக் 'கண்டர் கூலி மராயநாயகத் திருக்கோபுரம்' எனப்பெயர் சூட்டினான்.[25]

கோட்டையிலிருந்து வெளிப்பட்ட சம்புவராயன் கையில் ஏந்திய வாளுடன், குமாரகம்பணனுடன் போரிட்டான்.[26] இருவருக்கும் இடையே நடந்தக் கடுமையான வாட்போரில் சம்புவராயன் கொல்லப்பட்டான்.[27] 'கம்பண உடையார்' இராசகம்பீர ராச்சியத்தைக் கைப்பற்றி அதன் அரசரானார்' என்று திருப்புக்குழி கல்வெட்டுச் சான்று அளிக்கிறது[28]

இந்த வெற்றிக்குப் பின் சம்புவரையர் அரசு அழிக்கப்பட்டுத் தொண்டைமண்டலம் விசயநகரப் பேரரசோடு இணைக்கப்பட்டது. மரதகனகரா என்று அழைக்கப்பட்ட காஞ்சி மாநகரிலிருந்து குமாரகம்பணன் ஆளத் தொடங்கினான். காஞ்சி மாநகர், விசயநகரப் பேரரசின் முல்பாகல் மாநிலத்தின் இரண்டாம் தலைநகரானது. விசய நகரப்பேரரசின் ஏழு ராச்சியங்களில் ஒன்றாக இராசகம்பீர ராச்சியம் விளங்கியது.

கி.பி. 11-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து 14-ம் நூற்றாண்டின் பிற்பகுதி வரை, சோழப்பேரரசின் படைத் தலைவர்களாக, அவர்களது மேலாட்சியை ஏற்ற ஆட்சித் தலைவர்களாக வரலாற்றில் இடம்பெற்ற சம்புவரையர்கள்

பின்னர் பாண்டியப் பேரரசுக்கடங்கிய ஆட்சித்தலைவர் களாகவும், பின்னர் சிலகாலம் தன்னாட்சி பெற்ற படைவீட்டு ராச்சியத்தின் ஆட்சித் தலைவர்களாகவும்விளங்கி. விசயநகரப் பேரரசின் படையெடுப்பையடுத்து இரண்டாம் வென்று மண் கொண்ட சம்புவராயனின் மறைவோடு வரலாற்றிலிருந்து மறைந்து விட்டார்கள்.

இன்று படவேடு என அழைக்கப்படும் படைவீடு பகுதியில் அழிந்துபோன நிலையில் உள்ள கோட்டைமேடும், அம்மையப்பேச்சுரர் ஆலயமும், தொண்டை மண்டலப் பகுதியில் அவர்காலத்தில் எழுப்பப்பட்ட ஆலயங்களும் மண்டபங்களும் மறைந்துபோன சம்புவரையர் ஆட்சியின் நினைவுச் சின்னங்களாக விளங்குகின்றன.

---

## சான்றெண் விளக்கம்

1. க. ஆ. அ. எண் 267, ஆண்டு 1919. வழங்கப்பட்ட நாள் சகம் 1215, கி.பி. 1363
2. S.K. Aiyangar, South India and her Muhammadan invaders, P. 15, 60-61
3. க. ஆ. அ. எண் 297/1919
4. க. ஆ. அ. எண் 33/1933-34
5. கீழ்மின்னல் கல்வெட்டு, க. ஆ. அ .எண் 36/1933-34 உக்கல் கல்வெட்டு க. ஆ. அ. எண் 162/1939-40
6. க. ஆ. அ. 1936-37, ப. 80
7. க. ஆ. அ. எண் 297/1919; 357/1928-29
8. S. Thiruvenkatachari (ed), "Madhura Vijayam", 1957,
9. க ஆ. அ. எண் 297/1919
10. க. ஆ. அ. ஆண்டு 1936-37, பக் 80; 195, 196/1936-37

11. க. ஆ. அ. எண் 357/1928-29; 503/1906; 500/1906 8/1899; 350/1927-28; 213/1912; 240/1912; 504/1906; 523/1919; 188/1903
12. க. ஆ .அ. எண் 357/1928-29
13. க. ஆ. அ. எண் 195, 196/1936 37
14. க. ஆ. அ. எண் 240 1912
15. க. ஆ. அ. எண் 120/1939-40
16. க. ஆ. அ. எண் 18/1899
17. க. ஆ அ எண் 110 1921
18. "Mudhura Vijayam", Canto III Sloka 41
19. Ibid, Canto III Sloka 41
20. க. ஆ. அ. எண் 267/1919
21. "Madhura Vijayam" Canto IV Sloka 1-16
22. Ibid, Canto IV Sloka 51-66
23. Ibid, Canto IV Sloka 61
24. Ibid Canto IV Sloka 67-83
25. க. ஆ. அ. எண் 267, 268/1919, நாள் 1363
26. "Madhura Vijayam", Canto IV Sloka 77
27. Ibid, Canto IV Sloka 82, 83
க. ஆ. அ. 255/1934; 267/1919
28. க. ஆ. அ எண் 18/1899

# 7. ஆட்சித்திறன்

சோழப்பெரும்பேரரசு, பாண்டியப்பேரரசு, ஆகியவற்றின் படைத்தலைவர்களாகவும், அரசியல் அதிகாரிகளாகவும் விளங்கி, படைவீட்டு ராச்சியத்தை அமைத்து தொண்டை மண்டலத்தின் ஆட்சித்தலைவர்களாக கி.பி. 14-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விளங்கிய, சம்புவரையர்களின் ஆட்சித்திறனைப் பற்றியும் அவர்கால சமுதாயத்தைப் பற்றியும் அவர்கால கல்வெட்டுக்கள் நமக்குத் துணையாக அமைந்துள்ளன. அவர்கள் மேற்கொண்ட பட்டங்கள், அளித்த நிவந்தங்கள், கடைபிடித்த நீதிமுறைகள் பற்றியும், மக்களுடைய பிரிவுகள், சமுதாய நெறிமுறைகள் பற்றியும் பல விவரங்கள் கல்வெட்டுக்களிலிருந்து நமக்குக் கிடைக்கின்றன.

*ஆட்சிப்பரப்பு:* சோழப்பேரரசின் மண்டலங்களுள் ஒன்றுக விளங்கிய சயங்கொண்ட சோழமண்டலமான தொண்டை மண்டலத்து 24 கோட்டங்களுள் ஒன்றான பல்குன்றக் கோட்டத்தில் படைவீட்டு ராச்சியம் அல்லது இராச கம்பீர ராச்சியம் அமைந்திருந்தது. இது பல வளநாடுகளையும், நாடுகளையும், சதுர்வேதி மங்கலங்களையும் தன்னகத்தே கொண்டிருந்தது.

**தலைநகர்:**

சம்புவரையர்களின் தலைநகராக மரகதநகரம் என்று அழைக்கப்பட்ட விரிஞ்சிபுரமும், பிறகு காஞ்சிமாநகரும் விளங்கியது. படவேடு என்றழைக்கப்படும் படைவீடு அல்லது இராசகம்பீரன்மலை அவர்களது கோட்டைநகராக விளங்கியது.

**சிறப்புப் பட்டங்கள் :**

சோழப்பேரரசு, பாண்டியப்பேரரசு ஆகியவற்றின் படைத்தலைவர்களாகவும் அரசியல் அதிகாரிகளாகவும் விளங்கிய சம்புவரையர்கள் தம்முடைய பேரரசர் பெயரைத் தம்முடைய பெயரோடு இணைத்துக் கொள்வதை வழக்க மாகக் கொண்டிருந்தனர். செங்கேணி அம்மையப்பன் கண்ணுடைப் பெருமாளான விக்கிரம சோழச்சம்புவரராயன், அகளங்கச் சம்புவராயன், செங்கேணி அத்திமல்லனான எதிரிலி சோழச்சம்புவராயன் போன்ற பெயர்களை அவர்கள் கொண்டிருந்தனர்.

இராசநாராயணன், சகலலோகச் சக்கரவர்த்தி என்ற ஆரவாரப் பட்டத்தையும், பொன்னின்பெருமாள், பொன்னின் தம்பிரான் போன்ற பட்டங்களையும் சூடியிருந்தான். ஏகாம்பரநாத சம்புவரையன், தன் இயற்பெயரைவிட, வென்று மண்கொண்டான் என்ற சிறப்புப் பெயராலேயே கல்வெட்டுக்களில் குறிக்கப் பெற்றுள்ளான்.

**அதிகாரிகள் :** ஆட்சித்தலைவர்களாக இருந்த சம்பு வரையர்களுக்குத் துணையாக பல அதிகாரிகள் இருந்தனர். வீரசம்பனுக்குத் துணையாக வானபிதன் என்ற அதிகாரி யிருந்ததாக அறிகிறோம். இராசநாராயண சம்புவராயனின் மாளிகைக் காவல் அதிகாரியாக இருந்தவன் எழும்போதன் என்ற அகம்படிமுதலியார். இராசநாராயணனின் தந்தையான வென்று மண்கொண்டானின் சாம்பலைக் கங்கையில் கரைக்கும் பொறுப்பை இவன் ஏற்றான். அதன் நினைவாக கங்கையாடி மாதநாராயணன் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றுள்ளான். இதன் நினைவாக இவன் தன் தலைவனான வென்று மண்கொண்டான் பெயரால் ஏகாம்பரநாதர் ஆலயத்தைக் குட்டியத்தில் எடுப்பித்தான்,

திருவாய்க்கேழ்வி, வாரியன், கணத்தான், பூசைக் கண்காணித்தேவர் போன்ற அதிகாரிகள் இருந்தனர் என்பதைக் கல்வெட்டுக்கள் மூலம் அறிகிறோம். நாட்டார் எனப்படும் ஊரவை, ஊர்களின் நிர்வாகத்தை மேற்கொண்டிருந்தது. நாட்டாருக்குத் துணையாக ஊர்க்கணக்கன் இருந்தான்.

### நிலவரியும் பிறவரிகளும் :

நிலவரி முக்கிய வருவாயாக விளங்கியது. இதனைக் கடமை என்றும் ஆயம் என்றும் இறை என்றும் காணிக்கடன் என்றும் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

இராசநாராயண சம்புவரையனின் 4வது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று திருவோத்தூரில் உள்ளது. அதில் அக்காலத்தில் பெறப்பட்ட பல்வேறு வரிகள் பற்றிய பட்டியல் குறிக்கப்பெற்றுள்ளது.[1] நஞ்சை புஞ்சை கடமை, வெட்டி, சிறுபாடிக்காவல், கண்காணி, அறிமுக்கை, எடுத்துக்கொட்டி, உள்ளிட்ட நெல்லாயங்கள், கார்த்திகைக் காணிக்கை, ஊர்க் கணக்கன் காசு, காசு, இரட்டைக்காசு, முன்னிடும் பணம், வழிநடைக்கு இடும் பணம், முள்ளடி, ஏரிமீன் காசு, நூலாயம், வாசல் பணம், நல்லெருது நற்கிடா தேவைக்கிடும் பணம்; அதிகாரிக்குக் குடுக்கும் முதல் மந்தைப் பணம், மாவடை, குளவடை, உள்ளிட்ட காசாயங்கள், பொதுமக்கள் பேர்க்கடமை, செட்டிகள், வாணிகர் பேர்க்கடமை, சேனையங்காடிகள் பேர்க்கடமை, இடையர் பேற்கடமை, ஆசுவிகள் பேர்க்கடமை, பட்டித்தண்டம், குற்றத்தண்டம், தட்டார் பாட்டம், தறிஇறை, செக்கிறை, நாட்டு வரி, தட்டார் பேரால் ஊசி வாசி வரி, மேற்கட்டி வரி, கண்மட்ட வரி, இருபூலவரி, பழவரி, புதுவரி, புழுகு கடமை, வாசல் வினியோகம், நாட்டு வினியோகம், போன்ற பலவரிகள் விதிக்கப்பட்டிருந்தன.

இவற்றுள் சில தொழில் வரிகள், சில பொருள்கள் மீது விதிக்கப்பட்ட வரிகள், மற்றும் சில செய்த குற்றங்களுக்கு பெறப்பட்ட தண்டத்தொகை.

இந்த வரிகளை நிர்ணயிப்பதில் சம்புவரையர் தனிக் கவனம் செலுத்தினர். இராசநாராயணனின் 6வது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு,அவன் திருவோத்தூரில் கைக்கோளருக்கு தறிக்கடமை செய்து வைத்த விவரங்களைக் கூறுகிறது.[2]

அவ்வூரில் இருந்த 66 தறிகளுக்கும், மார்கழி மாதம் முதல் கார்த்திகை வரையுள்ள ஓராண்டுக் காலத்திற்கு தறிக் கடமையாக, தறி ஒன்றிற்கு, 6¼பணமும், வாசல் ஒன்றுக்கு வாசல் பணம், குழிப்பணம், சூலவரி உட்பட 2 பணமும் ஆக ஆண்டு ஒன்றுக்கு 8¼ பணம் தறிக்கடமையாக நிர்ணயிக்கப்பட்டு அது ஆணையாக கல்லில் செதுக்கப்பட்டுள்ளது.

### நில அளவு :

16 ச நீளமுள்ள கோல்கொண்டு நிலம் அளக்கப்பட்டது. குழி, மா, வேலி, காணி என்ற நிலத்தின் அளவுகள் கணக்கிடப்பட்டன. அரசன் செறுக்குழி, கதம்புலிகுழி, புளியஞ் செறுகுழி, செப்புச்செறுகுழி, அத்திபட்டம்குழி, அகக்குழி போன்றவை கல்வெட்டுக்களில் இடம் பெற்றுள்ள நிலஅளவுகளில் சில. நிலங்கள் நஞ்சை, புஞ்சை, தோட்டப்பற்று, நத்தம் என்று அதன் தன்மைக்கேற்ப பிரிக்கப்பட்டிருந்தது.

### இறையிலி நிலங்கள் :

சம்புவரையர் கோயில்களுக்கும், வழிபாட்டுத்தலங்களுக்கும், திருவிழா திருப்பணிகளுக்கும், நிலங்களைத் தானமாக அளிக்கும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர். இப்படி வழங்கப்பட்ட நிலங்கள் இறையிலி நிலங்கள் என்றழைக்கப்பட்டன. தேவதானம், திருவிடையாட்டம், பள்ளிச்சந்தம்,

மடப்புறம், சாலாபோகம் என்ற பெயர்களில் இந்நிலங்கள் அவை வழங்கப்பெறும். இறைவர்க்கு ஏற்ப பெயர் பெற்றன. இவை தவிர திருநாமத்துக்காணி, தேவபாகம், விஷ்ணுபாகம், செல்லக்காணி, இராசகரம் என்றும் இவை அழைக்கப்பட்டன. திருக்கோயில்களில் திருநுந்தாவிளக்கு ஏற்றி வைக்க அளிக்கப் பட்ட நிலம் திருவிளக்குப்புறம் என்றழைக்கப்பட்டது. ஒரு வேலி நிலத்திற்கு இரு நுந்தாவிளக்குகள் என்ற அளவில் இவை ஒதுக்கப்பட்டன.[3] கோயில்களில் திருப்பாட்டு ஓதுவாருக்கும் இறையிலி நிலங்கள் அளிக்கப்பட்டன. சில நற்பணிகளைச்செய்வதற்காகத் தனிப்பட்டவர்களுக்கு அளிக்கப் பட்ட நிலங்கள் சீவிதம். போகம், விருத்தி, காணி, பற்று என்று பெயர்பெற்றன. இராசநாராயணன் தன்தந்தையின் சாம்பலைக் கங்கையில் கரைத்த தன் அதிகாரியான எழும்-போதனுக்கு. குட்டியம் கிராமத்தை, இராசநாராயணநல்லூர் என்று பெயர் மாற்றி வரியில்லா கங்காகமண விருத்தியாகத் தானம் அளித்தான்.[4]

## திருப்பணிகளும் கொடைகளும் :

சம்புவரையர்கள் திருவல்லம், பிரமதேசம், முன்னூர், அச்சிறுபாக்கம், திருவக்கரை, மேலசேவூர், சீயமங்கலம், திருவோத்தூர், மடம், மதுராந்தகம், வழுவூர், விரிஞ்சிபுரம், கீழ்மின்னல், காஞ்சிபுரம், முதலிய ஊர்களில் உள்ள சிவன் கோயில்களுக்கும், திருமால் கோயில்களுக்கும் பெரும் பொருளைத் தானமாக அளித்துள்ளனர். சம்புவராயர் கோபுரம், மண்டபம், மாளிகை முதலிய திருப்பணிகளைச் செய்துள்ளனர்.

சமய வேறுபாடின்றி அவர்கள் சமணப்பள்ளிகளுக்கும் கொடையளித்துள்ளனர் போளூர் வட்ட வைகைத் திருமலை யில் அருகனின் படிமம் ஒன்று இராசநாராயண சம்புவராயன் ஆட்சியில் அமைக்கப்பட்டது

**நற்பணிகள் :**

பெருவெள்ளத்தால் ஏற்பட்ட கொடுமையிலிருந்து மக்கள் விடுபட இராசநாராயணச் சம்புவராயன் அவர்களுக்குப் பொன்னாகவும் பொருளாகவும் உதவியளித்தான். நிலத் தீர்வைகள் விலக்கப்பட்டன.[5]

முஸ்லீம்கள் படையெடுப்பால் நாடுவிட்டு ஓடிவந்த தென்தமிழக மக்களுக்கு முதலாம் வென்று மண்கொண்டா-னும், இராசநாராயணச் சம்புவராயனும் திருமடைவிளாகங் களில் இடமளித்தனர்.[6] அஞ்சினான் புகலிடம் என்ற பெயரால் கிராமங்களில் குடியமர்த்தப்பட்டனர். அவர்கள் மறுவாழ்வு பெறவும் கைத்தொழில்களைத் தொடங்கவும் பொருளுதவி அளிக்கப்பட்டது.

அகதிகளாக வந்து குடியமர்ந்த நெசவாளர்களுக்கு வரி களில் சலுகையளிக்கப்பட்டது. வென்று மண்கொண்டானின் ஆட்சியில் தறிக்கடமை ஒவ்வொரு தறிக்கும் $\frac{1}{4}$ பணமாக நிர்ணயிக்கப்பட்டிருந்தது.[7]

**நாணயங்கள் :**

பணம், கழஞ்சு, வராகன் போன்றவை பழக்கத்தில் இருந்தன. அன்றாடு நல்காசாக இருந்தது. வாசிபடாவராகன் என்று புகழ்ப்பெற்ற வீரசம்பன்குளிகை என்பது கல்வெட்டுக் குறிப்புகளில் இருந்து தெரிகிறது.

**சமுதாய அமைப்பு :**

தமிழர், தெலுங்கர், கன்னடியர், போன்ற பலமொழி பேசும் மக்களும், இலாளர்,சாலியர், கோலியர், கைக்கோளர், வாணியர், செட்டிகள், மன்றாடிகள், இடையர்கள், செக்கு வாணியர் போன்ற பலவகைப்பட்ட வகுப்பினரும் தத்தம் கடமைகளையும் தொழில்களையும் ஒழுங்காகச் செய்து

கொண்டு வாழ்த்திருந்தனர் என்பதற்குக் கல்வெட்டுக்களில் ஆதாரங்கள் உள்ளன. கைத்தொழில்களுக்கு ஊக்கம் அளிக்கப் பட்டது. வாணிகம் பெருகியது. சதராஸ் எனப்படும்துறைமுகப் பட்டிணமான சதுரங்கப்பட்டினம் சிறந்த வணிகத்தளமாக இருந்தது. இராசநாராயணன் அதை விரிவுபடுத்தினான். அதன் பெயரை மாற்றி இராசநாராயணப்பட்டிணம் என்று வழங்கச் செய்தான்.

## சமுதாயப் பாதுகாப்பு :

அன்னியர் படையெடுப்பின்போது இடம்விட்டு இடம் பெயர வேண்டிய நிலையில் பல இனமக்களும் கலந்து வாழ வேண்டிய நிலை ஏற்பட்டது. அப்படிப் படைவீடு பகுதியில் கன்னடர், தமிழர். தெலுங்கர், இலாளர் போன்ற பல இனத்தவரும் வாழ்ந்தனர். அவரிடையே திருமணப் பொருளாகத் தீயகொள்கை ஒன்று உருவாயிற்று. மணப் பெண்ணுக்காக மணமகன் (பரிசமாக) மிக்க பொன் தர வேண்டும் என்றும், மணமகனுக்காக மணப்பெண்ணின் தந்தை (வரதட்சணையாக) பொருள் தரவேண்டும் என்றும் ஒரு வழக்காடு பிராமணரிடையே நிலவிற்று. இத்தீ நெறியின் பயனாகப் பொன்கொடுத்து மணம் செய்து கொள்ளும் வாய்ப்பு இல்லாதவர், தவறான நெறிகளில் மணம் செய்து கொள்ளலாயினர். இந்நிலை போக்க சம்புவராயன் ஆணைபெற்று விரிஞ்சிபுரத்து வழித்துணை-நாதர்கோயிலில் ஊரார் கூடியிருந்து ஒரு திருமண ஏற்பாட்டைச் செய்து கொண்டனர்.

''இற்றை நாள்முதல் இந்தப் படைவீட்டு ராச்சியத்துப் பிராமணரில் கன்னடிகர், தமிழர், தெலுங்கர், இலாளர் முதலான அசேஷகோத்ரத்து அஷேச சூத்திரத்தில், அசேஷ சாகையிலவர்களும் விவாகம்பண்ணுமிடத்துக் கன்னியா-தானம் பண்ணாமல் பொன்வாங்கிப் பெண்கொடுத்தால்,

பொன் கொடுத்து விவாகம் பண்ணினால் இராசத்தூசணத் துககு உட்பட்டுப் பிராமணியத்துக்கும் புறம்பாகக் கடவர் என்று பண்ணின தர்மஸ்தாபன சமய பத்திரம்'' என்பதே அந்த ஏற்பாடு.[8] இவ்வாறே மற்றைச் சமுதாயத்தோரும் தந்தம் இனம் செம்மை எய்தும் பொருட்டுப் பலப்பல சீர்திருத்தங்களைச் செய்து கொண்டனர்.

'படைவீட்டாட்சியின் கீழ் வாழ்ந்த மக்கள் இவ்வாறு பல செவ்விய திருததங்களை ஏற்படுத்தி வாழ்க்கையில் உயர்ந்த குறிக்கோள்களைக் கொண்டு வாழ்க்கை வகைசெய்து கொண்டனர். மக்கள் வகுத்துக்கொள்ளும் ஏற்பாடுகளில் வழுவுவோர்' 'இராசதூசணத்துச்கு' உட்பட்டுத் தண்டனை பெற்ற செய்திகளை நவிரமலையடியின் வடபகுதியில் உள்ள கங்கன்மாதேவி, கட்டகரம்பாளையம் முதலிய ஊர்களில் வழங்கும பழஞ்செய்திகளால் அறிகிறோம்'' என்று ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் எடுத்துரைக்கிறார்.[10]

### சம்புவரையர் நீதி முறை :

சம்புவரையர்களுடைய நீதிமுறைபற்றி பலவரலாறு களைப் படைவீட்டுக்கருகிலுள்ள கண்ணமங்கலம் குளத்தூர் முதலிய ஊர்களிலுள்ள மக்கள் நினைவு கூறுவர்.[11]

எதிரிலிச் சோழச்சம்புவராயன் என்பவன் படைவீட்டில் இருந்த ஆட்சித்தலைவர்களுள் ஒருவன். அவன் படைத் தலைவர்களுள் ஒருவன் தொண்டை நாட்டுக் களத்தூர்க் கோட்டத்தைச் சார்ந்த மதுராந்தகம் பகுதியில் உள்ள குன்றத்தூர் காவலனான விக்கிரம கோட்டத்து முக்காட்டுப்-பட்டு ஊரின் பாடிக்காவல் புரிந்த மலையனூர் அம்பலக் கூத்தனான தென்னாட்டரையன் என்பவன். இருவரும் சம்பு வரையனின் நெருங்கியத் துணைவர்கள்.

இந்த இருவரும், நெல்லிக்கிழான் விண்ணனாள் என்பவன் மகளான வம்பு என்பவளை மணம்செய்ய விரும்பினர். வம்பு தென்னாட்டரையனை மணந்தாள். ஏமாற்றமடைந்த விக்கிரம சோழப்போரையன், தென்னாட்டரையனைக்கொன்றுவிட்டு ஓடிவிட்டான். வம்பு உடன்கட்டை ஏறினாள். தென்னாட்டரையன் தமையனான, இராம நம்பியான இருங்கோளப்பாடி நாடாள்வான் என்பவன் விக்கிரமசோழப் போரையனைக் கொன்று பழிவாங்க முனைந்தான். போரையன் உறவும் சுற்றமும் அழிக்கப்பட்டன. அவனுடைய களத்தூர்க்கோட்டம் சூறையாடப்பட்டது. விக்கிரம சோழப்போரையன் சம்புவராயனிடம் அடைக்கலம் புகுந்தான். சம்புவரையன், இராம நம்பியை படைவீட்டுக்கு வரவழைத்தான். இருவர் குறைகளையும் குற்றச்சாட்டுகளையும் கேட்டறிந்தான். "தென்னாட்டரையனைக் கொன்றது போரையன் செய்த குற்றம். போரையன் சுற்றத்தை அழித்தது நாடாள்வான் செய்த குற்றம். போரையன், நாடாள்வான் இருவரும் செய்த குற்றங்களுக்குக் கழுவாய் செய்ய வேண்டும்" என்று தீர்ப்பு அளித்தான். கொலையுண்ட தென்னாட்டரையன், உடன்கட்டையேறிய வம்பு ஆகிய இருவர் நினைவாக இரு நந்தாவிளக்குகளைப் போரையன் வைக்க வேண்டும் எனவும், தன் குற்றங்களுக்காக நாடாள்வான் இருநந்தாவிளக்குகள் வைக்க வேண்டும் எனவும் தீர்ப்பளித்தான். அத்துடன் இனி அவர்கள் இருவரும் பகைகொள்வதில்லை என்று உறுதி மொழியை அளிக்கவும் ஆணையிட்டான்.[12] எதிரிலிச் சோழச் சம்புவராயன் அளித்த நீதிநெறிதவறா இத்தீர்ப்பு திருக்கழுக்குன்றம் திருக்கோயிலில் கல்லில் பொறிக்கப்பட்டுள்ளது.[13]

சம்புவரையர் நீதிமுறைக்குச்சான்றாக இராசநாராயணன் அளித்த சில தீர்ப்புக்களைக் காட்டலாம். முதலாம் வென்று

மண்கொண்டான் ஆட்சியின்போது ஏற்பட்ட முஸ்லீம் படையெடுப்புக்கு அஞ்சிய மக்கள், திருவொற்றியூர் கோயிலின் செல்வத்தையெல்லால் மணணுக்கடியில் புதைத்து வைத்தனர், ஆயினும் பெருமளவு செல்வங்கள் முஸ்லீம்களால் கொள்ளையடிக்கப்பட்டது. எஞ்சிய செல்வத்தைக்கோயிலில் பொறுப்பில் இருந்த சிலரே களவாடி விட்டனர். இதைப்பற்றி ஆராய இராசநாராயணைச் சம்புவரையன் ஆட்சியில், கோயில் மகேஸ்வரர்கள், தர்மகர்த்தாக்கள், புவனேகபாகுதேவனின் பிரதிநிதி ஆகியோர் கொண்ட ஒரு குழு அமைக்கப்பட்டது. அக்குழுகோயிலின வியாகரனதான மண்டபத்தில் கூடி விசாரனை நடத்தியது அதன் விளைவாகக் குற்றவாளிகள் யார் என்பது கண்டறியப்பட்டது. ஆனால் குற்றமிழைத்தவர்கள் அனைவரும் முன்னரே இறந்து போயிருந்தனர்.

இதையறிந்த இராசநாராயணன், கோயில் சொத்தைக் கொள்ளையடித்தவர்களுக்குச் சொந்தமான நிலபுலன்களையும் வீடுகளையும் கைப்பற்றிக் கோயிலுக்கு அளிக்க ஆணையிட்டான.[14]

அதேபோல ஆட்சிக்கு எதிராகப் பெருங்குற்றமிழைத்த மற்றொரு குற்றவாளியின் சொத்துக்களைப் பறிமுதல் செய்ய ஆணையிட்டான்.[15]

நாட்டு மக்களுக்கிடையே ஏற்பட்ட தனிப்பட்ட சிக்கல்களை நல்லமுறையில் தீர்ப்பதிலும் சம்புவரையர் தனிக் கவனம் காட்டியுள்ளனர்.

இராசநாராயணன் ஆட்சிக் காலத்தில் திருவொற்றியூர் கோயிலில் பணிபுரிந்த இஷைபத்தனியிலார்களுக்கும், தேவரடியார்களுக்கும், பதியிலார்களுக்கும் இடையே யாருக்கு முன்னுரிமை என்பதையொட்டியெழுந்த வழக்கில் நீதிவழங்கி நெறிப்படுத்தினான்.[16]

பாசனநீர் பற்றி கிராமங்களுக்கிடையே எழுந்த வழக்கு களையும் சம்புவரையர் இருபுறமும் நிறைவு பெறும் வகையில் நீதி வழங்கி தீர்த்து வைத்துள்ளனர்.

இராசநாராயணன் ஆட்சிக் காலத்தில் உத்திரமேரூர், திருப்புலிவனம் ஏரிகளுக்கு நீர்கொண்டு செல்லும் கால்வாய் குறித்து இரு கிராமமக்களுககிடையே நீர் பங்கீடு பற்றிய, நீண்டநாள் தீர்க்கப்படாது இருந்த சிக்கலை அமைதியான முறையில் தீர்த்து வைக்கச்சம்புவராயன் முனைந்தான். அவன் தீர்ப்பின்படி அக்கால்வாய் திருப்புலிவனம், மாவண்டூர், பூண்டி, உத்திரமேரூர் ஏரிகளைஅதேவரிசையில் நிரப்ப வேண்டும் என ஆணையிடப்பட்டது.[17]

**மக்கள் நிலை :**

தமிழக முழுவதும் அன்னியரது படையெடுப்பினாலும், ஆதிக்கத்தினாலும் இருள்சூழ்ந்திருந்த காலத்தில் தொண்டை மண்டலத்தில், மட்டும் அமைதியான வாழ்க்கை யமைந்திருந்தது. அதற்குக் காரணம் 'அன்னியரோடு அனுசரித்துப் போகும் கொள்கையை' சம்புவரையர் கடை-பிடித்தனர் என வரலாற்றாசிரியர்கள் குறை கூறினாலும், சம்புவரையருடைய 'தனித்திருந்து தன்னை மட்டும் காத்துக் கொள்கை', அவர் ஆட்சியின் கீழ் இருந்தமக்களின் உயிருக்கும் உடமைக்கும் பாதுகாப்பளித்தது, அவர்கள் அமைதியான வாழ்வு நடத்த வகைசெய்தது என்பது மறுக்க முடியாத உண்மை.

அமையான வாழ்வு வாழ்ந்த மக்கள் பல அறப்பணி களில் ஈடுபட்டனர். ஆட்சியாளரின் துணையோடு தத்தம் பகுதிகளில் பல இனத்தவரும் இணைந்து அறப்பணி

யாற்றினர். மாதேவிமங்கலம் என்ற ஊரில் இருந்த பல சமூகத்தைச் சார்ந்தவர்களும் நிதி திரட்டி அங்கு நிறைவு பெறாமல் அரைகுறையாய் நின்றுவிட்ட ஆலயத்தைக்கட்டி முடிந்தனர் என்று அங்குள்ள கல்வெட்டு சான்றுகூறுகிறது.[18] அவர்களுடைய அறப்பணியைப் பாராட்டும் வகையில் அந்த சமூகங்களுக்கு வரிவிலக்கு அளிக்கப்பட்டது.[19]

அத்திப்பற்று நாட்டோர், தம்பிரான் திருப்பாட்டு ஓதும் மாஹேஸ்வரருக்கு காணிமடப்புற இறையிலியாக ; திருஞான சம்பந்த நல்லூரை ஈந்தனர்,[20] செய்யாற்றை வென்றான் சதுர்வேதி மங்கலத்து மக்கள் திருவோத்தூருடைய நாயனாற்கு இறையிலியாக தம் ஊர் நிலங்களை அளித்தனர்,[21] என்று கல்வெட்டுக்கள் பல மக்கள் அளித்த அறக்கொடைகளையும் பொதுப்பணிகளையும் பற்றிஎடுத் துரைக்கின்றன.

மகளிர் நிலை :

ஆடவரைப் போலவே பெண்டிரும் பல அறக்கொடைகள் புரிந்துள்ளனர்.

நித்தவிநோத சம்புவராயன் என்பவன் மனைவியான சோறுடையாள் என்பவள் தென்ஆற்காடு மாவட்ட பிரமதேச ஆயத்திறைவனுக்கு திருநந்தாவிளக்கு வைத்தாள் என்பதை அங்குள்ள கல்வெட்டினால் அறிகிறோம்.[22]

இராசநாராயணன் ஆட்சிக்காலத்தில் அவனுடைய 12வது ஆட்சியாண்டில் பொன்னூர் மண்ணை பொன்னாண்டை என்பவன் மகளான நல்லாத்தாள் என்ற பெண் வைகைத் திருமலையில் ஸ்ரீ விஹாரநாயனார் பொன்னெயில்நாதர் ஆன அருக தேவர்க்கு படிமம் ஒன்றை செய்து வைத்தாள்.[23]

கணவனை இழந்த பெண்கள் உடன்கட்டை ஏறும் வழக்கமுமிருந்தது.[24]

திருக்கோயில்களில் இறைவனுக்குத் தொண்டு செய்வதைத் தம் கடமையாகக் கொண்ட தேவரடியார், பதியிலார் ஆகிய பெண்கள் இருந்தனர்.[25] சமூதாய வாழ்வில் அவர்கட்குப் புகழும் மதிப்பும் இருந்தன. கோயில் வழிபாடு விழாக்களில் அவர்களுக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டிருந்தது. அவர்கள் செல்வமுடையவர்களாக இருந்தனர். என்பதோடு சிறந்த பக்தியுடையவர்களாகவும் அருள்உள்ளம் கொண்டவர்களாகவும் இருந்தனர் என்பது திருக்கோயில்களில் அவர்கள் புரிந்துள்ள பலவகை அறச்செயல்களால் புலனாகிறது.

திருவோத்தூருடைய நாயனாற் கோயிலிற் தேவர் அடியாள் அடைஞ்சானக காத்தாள் மகள் செய்யாண்டை ஆன சம்புவராய நாச்சி, திருவோத்தூருடைய நாயனர் கோயிலுக்கு எழுந்தருளுவித்த சுப்பிரமணியப்பிள்ளையார்க்கும் நாச்சியார்க்கும், நாயனர் ஆளப்பிறந்தார் ஆன இராசராச சம்புவராயர்க்கு விண்ணப்பம் செய்து திருமுகம் வாங்கி தேவதானம் அளித்தாள் என்ற செய்தியை அக்கோயில் கல்வெட்டொன்று கூறுகிறது.[26]

அதே போலத், திருவேத்தூருடைய நாயினார் கோயில் தேவரடியாள் உண்ணாமுலையாள் மகள் சம்பா அவ்வூர்க்கு எழுந்தருளிவித்த கான்கரை செல்வி அம்மைக்கு, நாயனார் ஆளப்பிறந்தார் ஆன இராசராச சம்புவராயர்க்கு விண்ணப்பஞ் செய்து திருமுகம் வாங்கி, காசு கடமை உள்பட்ட காசாயமும் வெட்டி, தனி ஆள், எழுத்துகொட்டி, அரிமுக்கை உள்ளிட்ட நெல் லாயங்களும் பிடாரி பட்டி ஆக அளித்தாள் என்று அங்குள்ள மற்றொரு கல்வெட்டு கூறுகிறது.[27]

தமிழக வரலாற்றில் அமைதியின்மையும், அன்னியர் ஆதிக்கத்தின் பாதிப்புகளும் மிகுந்திருந்த காலத்தில் தொண்டை மண்டல மக்கள் அமைதியாக வாழ வழி செய்தது சம்புவரையருடைய ஆட்சித் திறனும் அரசியல் கொள்கையும் தான் என்பது வரலாறு கூறும் உண்மை.

---

1. தெ. இ க. மடலம் 8 எண் 109 க. ஆ. அ. எண் 99,1900
2. க. ஆ. அ. எண் 111/1939-40
3. க. ஆ. அ. எண் 97/1900
4. க. ஆ. அ. எண் 33/1933-34
5. க. ஆ. அ. 230/1901; 410/1912
6. க. ஆ. அ 276/1912
7. க. ஆ. அ. 35/1933-34
8. தெ. இ. க. மடலம் 1 எண் 56
9. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, 'நந்தாவிளக்கு'' நந்தாவிளக்கு, பக். 87
10. மேலது. பக் 87
11. மேலது. பக் 88
12. மேலது. பக் 98
13. க. ஆ. அ. ஆண்டு 1932-33 பகுதி 2, பத்தி 25 க. ஆ. அ. 162/1932-33
14. க. ஆ. அ. எண் 203/1912
15. மேலது
16. க. ஆ. அ. எண் 212/1912
17. க. ஆ. அ. எண் 200/1922
18. க. ஆ. அ. எண் 53/1933-34
19. க. ஆ. அ. எண் 36/1933-34

20. க. ஆ. அ. எண் 76/1900
21. க. ஆ. அ. எண் 92/1900
22. க. ஆ. அ. 168/1918
23. தெ. இ. க. மடலம்'1, எண் 70. பக் 102
24. க. ஆ. அ. ஆண்டு 1932-33 பகுதி 2, பத்தி 25
    க. ஆ. அ. எண் 162/1932-33
25. க. ஆ. அ. 212/1912
26. க. ஆ. அ. எண் 95/1939-40
27. க ஆ. அ. எண் 93/1939-40

# முடிவுரை

தொண்டை மண்டல வரலாற்றில் தமக்கென ஒரு இடத்தை, அது மிகச்சிறிய ஒன்றாக இருந்தபோதும், சிறப்பான இடத்தைப் பெற்றவர்கள் சம்புவரையர்கள். தமிழகத்தின் இருபெரும் பேரரசுகளின் நம்பிக்கைக்குரிய படைத்தலைவர்களாக, ஆட்சித்தலைவர்களாக விளங்கியவர்கள் அவர்கள் அவ்விருபேரரசுகளின் மறைவுக்குப்பின், மற்றும் பேரரசான விசயநகரப்பேரரசு தமிழகத்தில் தன் ஆட்சியைநிலை நிறுத்தும் காலம் வரை தொண்டை மண்டலத்து படைவீட்டு ராச்சியத்தில் தன்னாட்சி நடத்தியவர்கள் சம்புவரையர்கள். குமாரகம்பணனின் படையெடுப்புக்குப்பின் சம்புவரையர்கள் வரலாற்றிலிருந்து மறைந்து விட்டனர். முதலாம்புக்கனின் காலத்திலேயே சம்புவரையரின் படைவீட்டு ராச்சியமான இராசகம்பீர ராச்சியம், விசயநகரப் பேரரசின் ஏழு மாநிலங்களில் ஒன்றாக மாற்றப்பட்டு விட்டது.

சம்புவரையர் மறைந்து விட்டாலும் அவர் வாழ்ந்த வாழ்வின் நினைவுச் சின்னங்கள், அவர் ஆட்சி செய்த பகுதிகளில் இன்றும் உள்ளன. அழிந்துபோகும் நிலையில் உள்ள அவைகளும் மறைந்து போய் விடாமல் பாதுகாக்கப்பட வேண்டும். படைவீடான படவேடு பகுதியில் உள்ள சின்னங்களும் ஆலயமும் அழிந்து போகாமல் பாதுகாக்கப்பட வேண்டும். அவை தமிழகத்தின் பண்டைய வரலாறு பதித்த அடிச்சுவடுகள், அவை என்றென்றும்சம்புவரையர் நினைவை, வரலாற்றை எடுத்துச் சொல்லும் சின்னங்களாக நின்று நிலைக்கத் தொல்பொருள் துறையினரால் பாதுகாக்கப்பட வேண்டும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 4 | சம்வரையரை | சம்புவரையரை. |
| 7 | 23 | அமையவில்லை | அமைவதில்லை |
| 15 | 6 | கள்ளர் மரபினரில் | கள்ளர், வன்னியர் மரபினரில் |
| 15 | 8 | கொள்ள வேண்டும். | கொள்ள வேண்டும். அவர்கள் யாதவராயர் மரபின் முன்னோர் என சாஸ்திரியார் குறிப்பிடுகிறார். |
| 16 | 14 | வித்தாவதாக | உரித்தாவதாக |
| 20 | 23 | குலோதுங்க சோழன் | குலோத்துங்க சோழன். |
| 26 | 2 | செங்கோணி | செங்கேணி. |
| 44 | 21 | பாண்டிய மன்னர்கள் | பாண்டிய அரசு |
| 52 | 2 | இராச ராச சம்புவரையன் | இராச நாராயண சம்புவரையன் |
| 57 | 20 | அவனாசிட்யை | அவனாட்சியை. |
| 61 | 18 | வென்று கொணடான் | வென்று மண்கொண்டான். |
| 94 | 24 | குன்றத்தூர் காவலனான விக்கிரம கோட்டத்து முக்காட்டுக் | குன்றத்தூர் காவலனான விக்கிரம சோழப் போரையன் என்பவன். மற்றவன் செம்பூர்க் கோட்டத்து முக்காட்டுக் |

# பயன்பட்ட கருவி நூற்பட்டி


தென் இந்தியக் கல்வெட்டுக்கள் தொகுப்பு.

கல்வெட்டு ஆண்டு அறிக்கை.

கலைக்களஞ்சியம், தமிழ்வளர்ச்சிக் கழகம், 1956

ஏகாம்பரநாதன் உலா, இரட்டைப்புலவர்

சதாசிவ பண்டாரத்தார், தி. வை.

"சம்புவராய மன்னர்"
தமிழ்ப்பொழில், துணர்2, தஞ்சை.

"பாண்டியர் வரலாறு"
கழகம், சென்னை, 1969

"பிற்காலச் சோழர் வரலாறு"
அண்ணாமலை நகர், 1974

6. துரைசாமிப் பிள்ளை, ஔவை. சு.
"நந்தா விளக்கு" மதுரை, 1956

7. வேங்கடசாமி நாட்டார், ந. மு.
கள்ளர் சரித்திரம், தஞ்சை, 1984.

ENGLISH:

1. Manual of North Arcot. Dt. Vol II,

2. Tamil Lexicon, Vol III, 1928-29.

3. Aiyankar, Soutn India and her Muhammadan invaders, New Delhi, 1921.

4. Nilakanta Sastri, K. A. The Cholas, Madras,
Madras 1975.

The Pandyan Kingdom,
Swathi Publications, Madras, 1972.

5. Thiruvenkatachari, S. (ed)
Madura Vijayam,
Annamalai Nagar, 1957.

6. Venkataramanaiya, W.
Early Muslim Expansion in South India.

# பின்னிணைப்பு

## சம்புவரையர் வரலாற்றோடு தொடர்புடைய சில முக்கியக் கல்வெட்டுக்கள்

### 1. மூன்றாம் குலோத்துங்கசோழன் (தெ. இ. க. மடலம் 8 எண் 106)

ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் மதிரையும் ஈழமும் கருவூரும் பாண்டியன் முடித்தலையும் கொண்டருளின ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு 27-வது பாண்டி நாடு கொண்டானான சம்புவராயனும், செங்கேணி அத்தி மல்லன் பல்லவாண்டானான குலோத்துங்க சோழச் சம்பு வராயனும், கிளியூர் மலையமான் பெரியுடையானான இராசராச சேதியராயனும், கிளியூர் மலையமான் ஆகார சூரனான இராச கம்பீரச் சேதியராயனும், குந்தந் நம்பூரானான இராசராச நீலகங்கரையனும், அம்மையப்பன் மருந்தனான இராசராச மூவேந்தரையனும், பாவந் தீர்த்தானான இராசேந்திர சோழச் சம்புவராயனும், மலையன் நரசிங்க பன்மனான கரிகாலசோழ ஆடையூர் நாடாழ்வானும், சோழன் திருவண்ணாமலை உடையானான குலோத்துங்க சோழ பிருதிகங்கனும், சோமன் வரந்-தருவானான சோளேந்திர சிங்கப் பிரதிகங்கனும் இவ்வனைவோமும் எங்களில் இசைந்து கல்வெட்டின படியாவது;

நாங்கள் ஒரு காலமும் இராசகாரியத்துக்குத் தப்பாமே நின்று சேதிராயர் அருளிச் செய்தபடியே பணி செய்யக் கடவோமாகவும், இப்படிச் செய்யுமிடத்து மகதை நாடாள்-வானான் வாண கோவரையனும், குலோத்துங்கசோழ வாணகோவரையனும் இவர்கள் பக்கல் ஆளாதல்,

ஓலையாதல், போகக்காட்டுதல், உறவுபண்ணுதல், அறுதி செய்தல் செய்யக்கடவோம் அல்லாதோம் ஆகவும். இவர்களும் இவர்கள் அநுதாபத்துள்ளார் பக்கல் நின்றும் ஆளாதல், ஓலையாதல் வந்ததுண்டாகில், தேவர் ஸ்ரீ பாதத்திலே போகக்கடவோமாகவும்; எங்களில் ஒருவன் வேறுபட நின்று இராச காரியத்துக்கும் சேதிராயர் காரியத்துக்கும் எங்கள் காரியத்துக்கும் விரோதமாகச் சில காரியம் செய்த துண்டாகில்...தேவரும் நாங்களும் இவனை.. அறச் செய்யக்கடவோமாகவும், எங்களிலே ஒருவரை வாண கோவரையராதல், இராசராசக்காடவராயனாதல் வினை செய்வார் உண்டாகில், படையும் குதிரையும், முதலுக்கு நேராகக்கொண்டு குத்தக்கடவோமாகவும், இப்படிச் செய்திலே மாகில் வாணகோவரையருக்குக் கடைகாக்கும் அடிமைக்குச் செருப்பு எடுக்கிறோம்.

## 2. மாறவர்மன் வீரபாண்டியன் :
## தெ. இ. க. மடலம் : எண் :101

1. ஸ்வஸ்தி ஸ்ரீ குலசேகரச் சம்புவராயன் ஓலை அனுக்காவூர் பிறிந்த அகரம் செய்யாற்று வென்றான் ஸதுர்வேதி மங்கலத்து
2. வாரியனும் காரணத்தானும் கண்டு விடை பெருமாள் வீரபாண்டிய தேவருக்கு 22-வது எதிராமாண்டு ஆடி மாதம் முதல் திங்கள் அக
3. ரம் நான்கெல்லைக்கு உட்பட்ட நஞ்சை புஞ்சை நிலத்தில் கடமை ஆயம் பொன் வரி உட்பட்ட எப்பேற்பட்ட வரிகளும் உட்ப
4. உதக பூர்வ்வ தர்ம்மதான இறையிலியாக உடையார் திருவோத்தூருடைய நாயனார் திரு முன்பே நாள் ஒன்றுக்கு ஐந்து பேர் அத்யய

5. நம் பண்ணக் கடவர்களாகவும் இப்படி உடைய இன்னாயனார் கோயில் திருமலையிலே கல்லுவெட்டிக் கொள்ள
6. வும் சொல்லி விட்டோம் இன்னாள் முதல் இப்படிச் செய்வதே.

## 3. வரிகள் பட்டியல்

இராசநாராயண சம்புவராயன் : (தெ.இ.க.மடலம் 8 என் 109)

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ஸகலலோகச்ச
2. க்கரவர்த்தி ஸ்ரீ இராசநாராயணன் அத்திப்
3. பற்று நாவற்பாக்கமான திருஞான சம்பந்த
4. ர் நல்லூர் ஊரவற்கும் இவ்வூரில் பிறிவான
5. குதிரைச் சேவகன் தாங்கல் ஊரவற்கும் தங்
6. கள் ஊர் பல தளி பூசைப்பாதியும் நீக்கி நாலா
7. வது சித்திரை மாத முதல் கடமை ஆயம் கோ
8. யில் முற்றுவப்பேறு உள்ளிட்ட பலநெல்லாயங்களு
9. ம் பொன்வரி கார்த்திகைக்காணிக்கை வாசல் விநியோ
10. கம் நாட்டுவரி வழிநடைக்கு இடும்பணம் முள்ளிடும் பண
11. ம் எடுத்தளவு ஷருத்துப்படி அரிசி காணம் கை விலை கா
12. ணம் நல்லெருது நற்கிடா தேவைக்கிடும் பணம் அதிகா
13. ரிக்கு குடுக்கும் முதல் மந்தைப்பணம் வாசற்பணம் வா
14. சல்குழி ஊர்க்கணக்கர் ஆசு பொதுமக்கள் பேர்க்கட
15. மை ஊர்க்கணக்கர், தட்டார்பேரல் ஊசிவாசி இனவரி
16. மேற்கட்டிவரி கார்த்திகைப் பச்சை புதுநெல்லு சூலவ
17. ரி மாவடை மரவடை தறிக்கடமை ஆயம்நூலாயம்செட்
18. டிகள் வாணிகர் சேனையங்காடிகள் இவர்கள் பேற்கடமை

19. கண்பட்டவரி இருபூலவரி புமுகு கடமை செக்குக் கடமை ஏரி
20. மீன்காசு இடையர் பேற்கடமை பழவரி புதுவரி மற்றும்
21. இப்பற்றில் கொள்ளும் பலவரிகளும் பல உபாதிகளும் உட்
22. பட திருப்பாட்டு ஓதும் மாஹேஸ்வரர்க்கு இவ்வூர் நஞ்சை
23. புஞ்சை தோட்டப்பற்று நாற்பாற்கெல்லை ஊர்அட
24. ங்கலும் உதக பூர்வதர்ம்மதாநம் காணி மடப்புறம் ஸ
25. ர்வ்வ மாந்நிய இறையிலி ஆக கையோலை குடுத்தாபா
26. கம 48 இதில் தேவபாகம் 2 விஷ்ணுபாகம் 1 நீக்கி
27. பாகம் 45 ஆகப் பாகம் நாற்பத்தெட்டும் இவர்களு
28. க்கு காணி மடப்புற இறையிலி ஸர்வ்வமாநியமாக
29. குடுத்தோம் இவர்களுக்கு விற்றோற்றி பரிக்கிறை யங்களு.
30. க்கும் தாநாதம... விக்கிறையங்களுக்கும் ஸகல ப்ராத்திக்கும் உரித்தாவதா
31. கவும் இப்படிக்கு கல்லினும் செம்பினும் வெட்டிக் கொண்
32. டு சந்த்ராதித்தவரையும் செல்லக்குடுத்தோம் இன்று
33. ள் முதல் இப்படி செய்க இத்தன்மத்துக்கு அஹிதம் பண்ணி
34. நாருண்டாகில் பஞ்ச பாதகம் பண்ணின பாவம் கொள்
35. ளக் கடவர்கள் ஆகவும் இது பந்மாஹேஸ்வர ரக்ஷை.

## 4 தறிக்கடமை செய்தது:

இராசநாராயண சம்புவராயன்: (க. ஆ. அ. எண். 111/1939-40)

1. ஸ்வஸ்திஸ்ரீ சகலலோகச் சக்கரவர்த்தி இராச நாராயணன் சம்பு வராயற்

# சம்புவரையர்

2. க்கு யாண்டு 6வது மார்கழி மாதம் இருபதாந்தியதி திருவோந்தூர் கை
3. கோளரில் தறி இட்டு நெய்யும் பேர்க்கு தறிக்கடமைக்கு இவ் வாண்
4. டைக் கார்த்திக்கை மாத வரையும் கடமை கொண்டு போந்த மரியாதி
5. மார்கழி மாத முதலுக்கு தறிக் கடமை மாத இரெட்டி சூல வரி வட்டம்
6. சம்படம் உட்படத் தறி ஒன்றுக்கு ஆண்டு ஒன்றுக்கு ஆறே கால் பணமும்
7. வாசல் ஒன்றுக்கு வாசல் பணம் சூலவரி குழிப்பணம் உட்பட இரண்டு பணமும்
8. ஆக ஆண்டு ஒன்றுக்கு எட்டேகால் பணம் கொள்ளவும் இப்படிக்குச் சந்திரா
9. தித்தர் வரையும் கொள்ளவும் இப்படி கொள்ளும் அளவுக்கு மார்கழி மாதம் முத
10. லுக்கு மேல்தறி உட்படத்திட்டிக்கண்டதறிக்கு மடிந்த தறி உட்பட முழுத்தறி அறு
11. பத்து ஆறுக்கு அடைப்புப்பேறு கழித்து நின்ற தறி அறுபதுக்கு ஈரும்துகிரும்
12. கண்டு இத்தறியில் ஏறினதறிக்கும் அடைப்புப்பேறு கழித்து நின்ற தறிக்கும் இம்மரியா
13. தி கொள்ளவும் நிலையாக தறி அறுபத்து ஆறில் குறைந்த தறிக்கு இருந்த குடியில் நிலை
14. ஆன தறியிலே இத்தறி அறுபத்து ஆறுக்கும் இந்த தறி ஒட்டுப்படி கடமை சந்திராதித்த
15. வரையும் கொள்ளவும் சொன்னோம் இப்படி செய்வதே- --

